டவர்கள் துக்கம் அதிகரிக்கும்' என்று யோசனை செய்து கொண்டு வெளிப்படையாக ' நாங்கள் துவைத வனத்திலிருக்கும் எங்கள் பசுக்கூட்டங்களை மேல்பார்வை பார்க்கப் போகிறோம்.' என்று சொல்லிக்கொண்டான். இதைக்கேட்ட திருதிராஷ்டிரன் இவனது கெட்ட எண்ணத்தைத் தெரிந்து கொள்ளாது போய்வரும்படி அனுமதி கொடுக்க எல்லோரும் துவைதவனம் புறப்பட்டுப் போய்ச் சேர்ந்தனர். அங்கு வந்ததும் தமது பசுக்களைக் கவனியாது ஒருவாறு பார்த்துவிட்டு பாண்டவர்கள் கஷ்டப்படும் இடத்திற்கு அருகாமையிலிருந்த தோட்டத்தில் அவர்கள் புகுந்தார்கள்.

அந்தத் தோட்டத்தில் இருந்த ஓர்குளத்தில் இவர்கள் ஜலக்ரீடை செய்யலாம் என்று உள்ளம் பூரித்தனர். இம்மாதிரி இவர்கள் புகுந்த இடமாகிய அந்தத் தோட்டம் குபேரனுடையதாக இருந்தது. இவர்கள் அங்கு வரும்முன் குபேரன் பட்டணத்திலிருந்து சித்திரஸேனன் என்ற ஒரு கந்தர்வ ராஜன் அங்கு வந்து ஜலக்ரீடை செய்துகொண்டிருந்தான். இதனால் அப்பொழுது கந்தர்வ ராஜனுக்கும் துரியோதனாதியருக்கும் பெரிய போர் உண்டாயிற்று. அதன் முடிவில் கந்தர்வ ராஜன் ஜயம் அடைந்து துரியோதனாதியரையும் அவர்கள் பெண்டுகளையும் ஒழுங்கிற்கு விரோதமாக பர புருஷர்களோடு சேர்த்துக் கட்டி எல்லோரையும் சிறைபிடித்துக்கொண்டு ஆகாயத்தில் கிளம்பிவிட்டான். அப்பொழுதுதான் கெடுவான் கேடு நினைப்பான் என்பதைத் துரியோதனன் நன்றாக அறிந்தான். இதில் அகப்படாதிருந்த சிலர் ஓடோடியும் வந்து பாண்டவர்களிடம் துரியோதனாதியருக்கு வந்த ஆபத்துக்களைத் தெரிவித்தனர். இதைக் கேட்டதும் கருணா நிதியாகிய தருமபுத்திரர் துரியோதனாதியரைச் சிறைமீட்டு வரும்படி தமது தம்பிகளாகிய பீமார்ச்சுனரை ஏவினர். அவர்கள் முதலில் தமக்குத் தீங்குசெய்த துரியோதனாதியரைக் காப்பாற்றுவது அழகன்று என்று வாதாடினர். அப்பொழுது தருமபுத்திரர் முதலில் 'நமக்குப் பிறர் எவ்வளவு கெடுதிகள் செய்தபோதிலும் அவர்களுக்கு நாம் கெடுதியைச் செய்யலாகாது. அவ்வாறு செய்வதால் நாமும் அவர்களுக்கு ஸமானமாவோம்' என்று நியாயம் சொல்லியும் கேட்காத தம்பிகளை நோக்கி 'நம்முள் வரும் சண்டைகளில் நாம் ஐந்து பேரும் நூறு பேருமாகப் பிரியலாம். வெளியிலிருந்து ஒருவன் நம்மோடு சண்டைக்கு வருவானாயின் நாம் நூற்றைந்து பேராகத்தான் இருக்கவேண்டும்' என்று புத்திமதி கூறினர். இதைக்கேட்டதும் பீமார்ச்சுனர் மிகுந்த வேகத்துடன் சென்று கந்தர்வனுடன் போர்செய்து அவனை வென்று துரியோதனாதியரை விடுவித்து தருமபுத்திரர் முன்புகொண்டுவந்து நிறுத்தினார்கள். அப்பொழுதுங்கூட தர்மபுத்திரர் துரியோதனனைப் பரிஹாஸம் செய்யவேயில்லை. அவனுக்கு வந்த ஆபத்தை நினைந்து கொஞ்சம் துக்கப்பட்டு அவனிடம் நயவார்த்தைகள் சொன்னார். துரியோதனாதியருக்கு 'நாம் பிறருக்குசெய்ய நினைத்த தீங்கு நம்மேலேயே திரும்பிவிட்டதே!' என்ற வெட்கம் பாதிக்கத்தொடங்க, ஒன்றும் பேசாது தலைகுனிந்து நின்றுகொண்டிருந்துவிட்டு மிகுந்த துக்கத்துடன் அவர்கள் தமது ஊர்போய்ச் சேர்ந்தனர்.

*
* *

புத்தியால் அறியோணாப் புராணன் பக்தியாம் வலையில் பிடிபடுவான்.— பகவான் துரியோதனாதியரிடம் பாண்டவர்க்காகத் தூது செல்லப் புறப்படுகையில் ஸஹாதேவன் பகவானை நோக்கி 'நீ தூதுபோனால் என்ன, போகாதிருந்தால் என்ன; துரியோதனன் பாகங்கொடுத்தால் என்ன, கொடுக்காமலிருந்தால் என்ன; திரௌபதி கூந்தலை முடித்தால் என்ன, முடிக்காவிட்டால் என்ன; நீ நினைத்தபடி காரியங்கள் முடிக்கும்விதம் எனக்கு எப்படித் தெரியும்' என்றான். இவன் எல்லோரையும் போலத் தனது அபிப்பிராயத்தை வெளியிடாது ரகஸியம் தெரிந்தவன்போலப் பேசியதைக்கண்ட பகவான், அவனிடம் உள்ள ரகஸியத்தை அறியவேண்டுமென்று அவனைத் தனிமையாக ஒரு மண்டபத்திற்கு அழைத்துப்போய் 'நீங்கள் எல்லோரும் சொல்லியபடி பாரதயுத்தம் நடவாது நிறுத்த உபாயம் என்ன?' என்று கேட்டார். அதற்கு ஸஹாதேவன் 'நீ பாரதயுத்தத்தில் எல்லோரையும் சாம்பலாக்கி பூபாரம் நீக்கவந்திருக்கிறாய். நீ நினைத்தால் அல்லவா பாரதயுத்தம் நிற்கும். அப்படி இருப்பினும் என் அபிப்பிராயத்தில் கர்ணனுக்கு ராஜ்ய பட்டாபிஷேகஞ் செய்து, அர்ச்சுனனைக் கொன்று, திரௌபதியின் கூந்தலையும் அறுத்து, உன்னையும்பிடித்துக் கட்டிவிட்டால் இந்த யுத்தம் உடனே நின்றுவிடும்' என்று சொன்னான். அப்பொழுது பகவான் 'முன்னே சொல்லியவைகள் எல்லாவற்றையும் நீ செய்தாலும் என்னை எவ்வாறு உன்னால் கட்டமுடியும்' என்று கேட்க, 'நீங்கள் உங்கள் ரூபத்தைக் காட்டுங்கள். நான் கட்டுகிறேன்' என்றான் ஸஹாதேவன். உடனே பகவான் அநேக ரூபங்களோடு அவன் முன் தோன்ற அவன், பகவானது உண்மை ரூபத்தைத் தன் ஞானத்தால் உணர்ந்து தனது கருத்தாகிய (பக்தியாகிய) கயிற்றினால் கட்டிவிட்டான். அக்காலத்தில் பகவான் தம்மை விட்டுவிடும்படி கேட்டுக்கொள்ள, அவன் 'எங்கள் ஐவரையும் வரும் யுத்தத்தில் காக்கவேண்டும்' என்று கேட்டுக்கொண்டான். பகவான் அப்படியே ஆகட்டும் என்று சொல்லி, அப்பொழுது நடந்த விஷயங்களை ஒருவருக்கும் சொல்லாதிருக்கும்படி கட்டளையிட்டு பாண்டவர்கள் இருந்த இடம்வந்து சேர்ந்தார்.

இங்கு கூறியிருக்கும் கிருஷ்ண ஸஹாதேவ ரஹஸ்ய ஸம்வாதத்தை வில்லிபுத்தூர் ஆழ்வார் கிருஷ்ணன் தூதுச் சருக்கத்தில் வெகு அழகாகக் கூறியுள்ளார்.

# ஸ்திரீகளுக்கான பக்கங்கள்

## LADIES' PAGES

### 2. விழாவெடுத்தகாதை

நன்னெறி வழுவாதவர்க்குத் தெய்வந் துணை என்பதற்கு ஓர் ஐயமும் இல்லை. அவரை என்றும் நல்லறிவுடையாரிடத்தே வைப்பது கடவுளினது வைபவம். மனதிலுண்டாகும் துன்பம் வெளிக்கூறாதிருந்திட்டால் விரியும்; அதிகமாகும். அதைப் பொறுப்பது மிகவும் கஷ்டம். அதைப் பொறுக்கமுடியாது போயினும், உடன்கூறி துன்பமாற்றுவதற்கு தக்கவர் கிடைப்பின்தான் கூறுவர். கோவலனும் கண்ணகியும் தாமுற்றவற்றைக் கூறத்தக்க தகைமையுடையவள் என்று கவுந்தியிடம் தமது வரலாற்றை எல்லாம் கூறினர். தமது கஷ்ட நிலைமையும், தாம் தனியாக வாழவேண்டுமென்று கொண்ட ஆவலும், இவற்றை எல்லாம் முழுதும் கவுந்திக்குச் சொற்றனர்.

இதற்குள் தனது வேலையை முற்றும் நடத்தவேண்டுமென்ற ஆவல் பூண்டொழுகும் கோவலனுக்கு கவுந்தியிடம் கண்ணகியை அடைக்கலமாகவைத்து மதுரைமாநகர் சென்று அதனிடையுள்ள நிலைமையை அறிந்து சிலம்பை விற்று தான் செல்வப்பெருக்கொடு வாழவேண்டுமென்று மனதிற்பட்டது. இதற்குள் மதுரை எல்லையைக் கடந்து மதிற்புறம் வந்து ஆயர்பாடி இருக்குமிடம் சேர்ந்தனர்.

கவுந்தியும், தன் நன்வழிக்கோட்பாடின் மனோபலத்தினால் தான் நற்குணமுடையாளை நல்லிடத்தே வைக்கவேண்டுமென்ற ஆவலோடு அவரோடே ஆயர்பாடியுள் வந்தாள். கண்ணகியின் கற்பின் நிலைமையும், மனத்தின் உயர்ந்த பாவமும், அவள் மனதைக் கண்ணகிப்பால் கலக்கும்படிச்செய்துவிட்டது. கண்ணகியைவிட்டுச் செல்வதென்றால் கவுந்திக்குக் காலெழவில்லை. நற்குணமுடையார்க்கு கடவுள் தானே கருணை வடிவாக உதவிசெய்வது யார்தான் அறியாதவர்? அவர் கருணைவிலாஸத்தின் ஸாதனம் போல்தான் கவுந்தி கண்ணகிக்கும் கோவலனுக்கும் பட்டது.

ஆயர்பாடி வந்தடைந்தனர். அதை முற்றுங் கண்டானந்தங் கொண்டனர், நல்லிடமொன்று வேண்டி அலைந்தனர், இதற்குள் கண்ணகியைக் கவுந்திபால் அடைக்கலம் வைத்துவிட்டு "நான் மதுரைமாநகரஞ்சென்று, சிலம்பை விற்குமிடங்கண்டு, அதை விற்று, வெறுங் கையனாயிருப்பதை ஒழிந்து, செல்வமோங்கியவனாக வருவேனென்று" கூறினன் கோவலன். அப்பொழுது அங்கு மாடலன் என்னும் தோழன் ஒருவன் தோன்ற அவனோடு வேடிக்கையாக காலத்தைப் போக்கிக்கொண்டிருந்தனன்.

இதற்குள் கவுந்தி, "இனத்தோடே இனஞ்சேரவேண்டும்" என்ற எண்ணங்கொண்டு, அவ்விடத்து இடைச்சியர் கூட்டத்துள் பெரியாளாகிய மாதரி என்பவளைக் கண்டு அவளது நன்னடக்கை, குணவிசேஷம் முதலியவற்றைக் கண்டு ஆநந்தம் கொண்டனள். அவளிடத்து கண்ணகியை அடைக்கலம் வைக்கலாமென்று எண்ணினள். "பசுவைக்காத்து அதன் பயனை எல்லாருமடையச் செய்யும் இம்மடந்தையர்க்கு கீழ்மை என்பதே கிடையாது. இம்மாதரி, நம்மிடை பேசும் வழியிற் பார்க்குமிடத்து நெஞ்சத்தில் அழுக்குடையயவள் அல்லள். அதுமாத்திரமன்று. பெரியவள்; ஈகைகுணமுடையவள். இம்மாது குணத்திற் சிறந்தவள். ஒழுக்கத்தில் உயர்ந்தவள். இவள்பால் தான் கண்ணகியை அடைக்கலம் வைக்கத் தகுந்தவள்" என்று கவுந்தி எண்ணினள்.

எண்ணியதும், "மாதரி! நான் சொல்வதைக் கேள். இம்மடந்தை உயர்குலத்திற் பிறந்தவள். அவள்கணவனும் மேல்வகுப்பைச்சார்ந்த வாணிபன். இவர்களை? உம்மிடம் வைத்தனன். இவரைக் காணாத பொருளைக்கொண்டு போற்றுவதுபோல, போற்றி, விருந்தோம்பி வரவேண்டும். இவள் கண்ணகி. அழகிற் சிறந்தவள். புகழிற்பெருத்தவள். குணத்திலுயர்ந்தவள். இவள் கணவன் மதுரைசென்று வாணிபம்செய்து வரும்வரையும் இவளை உனக்கு அடைக்கலம் புகுவித்தேன். இவளை மங்கள நீரிலாட்டி தாயும் தந்தையும் இவளுக்கு நீயேயாகிக் காப்பாற்றுவாயாக! என்னோடு இப்பொழுது வந்த இக்கண்ணகியின் சீரடியின் உருவைப் பூமிதேவியும் இதுகாறும் கண்டதில்லை. இவள் அகம்விட்டு வெளிவந்தவளல்லள். வாசற்படி கடவாதவள். கற்பென்னும் கவசத்தினை அணிந்த பெருந்தெய்வமீது. இக்கற்பினுருவத்திற்கு அடைக்கலம் தருக! பின் போகும் வழிக்கு பேரின்பமளிக்கும் ஸாதனமிதுவே ஆகும்" என்றுமாதரியை நோக்கி கவுந்தி சொல்லி அவள்பால் கண்ணகியை அடைக்கலம் வைத்துவிட்டுத் தன்வழியே தான் சென்றாள்.

மாதரியால் ஏவப்பட்டு, ஆயமாதர்கள் சுவையுடைய பண்டங்களைக் கண்ணகிக்குக்கொடுத்து அடிசில் செய்யுமாறு கேட்டுக்கொண்டனர். அவர் ஏவியவாறு மங்கள நீரில் ஸ்நாநம்செய்து சுவையோடு கூடிய அடிசில்செய்து கோவலனுக்கிட்டு அவன் பசியார உண்டபிறகு, எஞ்சி நின்றதைத் தானுமுண்டு ஸுகமாக இருந்தனள். என்றும் சமையல்செய்யத் தெரியாதவள் கணவன்மேலன்பென்கிற வலிமை

யால் சுவைமிக்க அன்னம் சமைத்தது அதிசயமே! உண்டிகொண்ட தன் கணவனுக்கு வெற்றிலையும் பாக்கும் அளித்து, அருகில் நின்றனள் கண்ணகி.

கோவலன் இவற்றைக்கண்டனன். மாதவியின் வெளியன்பிற்கும் கண்ணகியின் உள்ளன்பிற்கு முள்ளபேதம் அவன் மனதைப்பிளந்தது. அவனுக்கும் பொறுக்காது, இவ்வாறு தானே கூறினன்:—"கண்ணகி! யான் உன் மனமறியாப் பேதையாயிருந்தனன். நல்லொழுக்கத்தைவிட்டுக் கொடுவழியில் வாழ்ந்த எனக்கு நற்கதியுண்டோ? இதைக் கவனியாது உன்னையும் சிறுமைப்படச்செய்தேன். யானும் இழுக்கடைந்தேன். என் சொல்தவறாது நடுயாமத்தில் மதுரைவர முழுமனத்தோடு எழுந்த உன்னைக்காணுந்தோறும் என் மனம் வெட்கமடைகின்றது. என்ன பாவம் செய்தேன், நான் எவ்விதம் உய்வேன்."

அது கேட்ட கண்ணகி "யான் அது காறும் நீவிரில்லாமையால் இல்லறம் நடத்தமுடியாது, நீவிர்தகாத ஒழுக்கத்தில் வீழ்ந்ததினால் என் மாமியவர்க்கும் மாமனவர்க்கும் உண்டான வெறுப்பு யான் எதிரில் நிற்பதாலே அவர்க்கு விருத்தியாவதனாலும், அன்றியும், உம்மிடம் யான்கொண்ட பாசத்தின் வலிமையும், இரண்டும் கலந்து நீவிர்கூறியதும் யான் ஒருமைப்பட்டு வந்தனன். நீவிர் வருத்தமடையவேண்டா"மென்று கூற, கோவலன் "இனியுன் சிலம்பைத்தா. அதை மதுரை சென்று விற்றுவருவேன்" என்றான். அவளு மதை மிக வணக்கத்தோடு தந்தனள். அதை வாங்கிக்கொண்டு "என் பிறிவாற்றாது வருத்தப்படவேண்டாம். நான் துரிதமாய் வருவேன். கவலையொழி" என்று சொல்லிக்கொண்டேயிருந்த கோவலன் அவள் தனித்திருக்கும் நிலைமையை யோசித்து தன் கண்ணில்கண்ணீர் ததும்ப, அவள் கண்டால் வருந்துவாளென்று எண்ணி திரும்பிப் பாராமல் எதிர்க்கண்ட துற்சகுணங்களைக் கவனியாது மதுரையூர் அடையப் போந்தனன்.

கோவலன் போனதும் அநேக துற்சகுனங்கள் நேர்ந்தன. பிரையிட்ட தாழிகளில் பால் தோயவில்லை. காளை மாட்டின் கண்களின் நீர் சிந்தியது சிந்தியவண்ணமாக நின்றது. வெண்ணெய் உருகவில்லை. கன்றுகள் துள்ளி விளையாடவில்லை. குழைந்து நிற்கின்றன. பயந்து பசுக்கூட்டம் அரற்றும். பசுவின் கழுத்திற்கட்டிய மணிகள் அறுந்து வீழ்ந்தன. இவற்றை எல்லாம் கண்ட மாதரி நமக்கேதோ துன்பமுள்ளது. இதை நீக்க வழி தேடவேண்டுமென்று நிஸ்சயித்தாள்.

யோசித்தனள். கோபாலனைக்காக்கும்படி வேண்டவேண்டுமென்றனள். மாயவனை வாழ்த்திடில் மாயமாத் துன்பம் போமென்றேத்தினள். முன்னாள் திருமாலை இத்தகைய காலத்தில் வணங்கும்பொருட்டு ஒரு கூத்தாடுவதுண்டு. இது ஓர் பெருவிழா. கண்ணனது மகிமையைக் கூறும் கூத்து. இதற்கு ஆய்ச்சியர் குரவை என்று பெயர். குரவை என்பது எழல்லது ஒன்பது பேர் கைக்கோத்தாடுமோர் கூத்து. இக்கூத்தைப் பெண்மணியாகிய கண்ணகி எதிரில் ஆடத் தலைப்பட்டனர். இதனால் பசுவும் கன்றும் துன்பம் நீங்குமென்று சொல்லினள்.

பாணர்கள் வந்து மாயவனென்னும் நரம்பும் பின்னையுங் கலக்க கைக்கிளை இடப்பக்கத்தே படர யாழைமீட்ட தோழிகளெல்லாங் கலந்து கைக்குட் கைக்கலந்து கண்ணனைப்பாடி கன்றுகளின் வலிதீர குரவையாடினர். "புள்ளூநங் கடவுளைப் போற்றுதும் போற்றுது" மென்று எல்லாரும் போற்றி,

"மூவுலகு மீரடியான் முறைநிரம்பா வகைமுடியத்
தாவியசே வடிசேப்பத் தம்பியொடுங் கான்போந்து
சோவரணும் போர்மடியத் தொல்லிலங்கை கட்டழி
சேவகன்சீர் கேளாத செவியென்ன செவியே! [த்த
திருமால்சீர் கேளாத செவியென்ன செவியே!

"பெரியவனை மாயவனைப் பேருலக மெல்லாம்
விரிகமல வுந்தியுடை விண்ணவனைக் கண்ணுந்
திருவடியுங் கையுங் கனிவாயுஞ் செய்ய
கரியவனைக் காணாத கண்ணென்ன கண்ணே!
கண்ணிமைத்துக் காண்பார்தங் கண்ணென்ன கண்ணே!

"மடந்தாழு நெஞ்சத்துக் கஞ்சனார் வஞ்சங்
கடந்தானை நூற்றுவர்பா லுற்றிசையும் போற்றத்
தொடர்ந்தா ரணமுழங்கப் பஞ்சவர்க்குத் தூது
நடந்தானை யேத்தாத நாவென்ன நாவே!
நாராய ணாவென்னா நாவென்ன நாவே.!" *

எனத்துதித்து (கண்ணகிக்காய் தெரியாது). போற்றிய ஆய்ச்சியர் குரவை அவட்கெவ்வாறு உதவியாகியதென்பது பின்தானே தெரியவரும்.

* சிலப்பதிகாரம்—ஆய்ச்சியர் குரவை—படர்க்கைப்பரவல்;

## விசேஷ வர்த்தமானங்கள்
### GENERAL NEWS

ஹாலிவால் நக்ஷத்ரம்.—நமது போதினியில் பிரசுரமான இயற்கை அற்புதங்கள் என்னும் தலைப்பின் கீழ் 1909ஞு ஏப்ரல்மீ 10-ம் பகுதியில் எழுதி வெளியிட்டுள்ள வால் நக்ஷத்ரங்கள் என்னும் வியாஸத்தைப் படிப்பவர்களுக்கு ஹாலிவால் நக்ஷத்ரத்தைப்பற்றிய விஷயங்கள் சில (305-பக்கத்திலிருந்து) தெரியவரும். இந்த நக்ஷத்ரம் ஸுமார் 1911-வருஷம் தெரியவேண்டியது. இது 1909ஞு அக்டோபர்மீ 1[illegible] அன்று இங்கிலாந்திலுள்ள கேம்ப்ரிட்ஜ் நகரத்து நக்ஷத்ர சாலையில் தூர திருஷ்டிக் கண்ணாடி மூலமாகப் பார்க்குங்கால் புலப்பட்டதாம். இது ஸாதாரண கண்ணுக்குத் தென்படுவது அஸாத்யம். இந்த வால்நக்ஷத்ரம் பூமியின் அருகாமையில் வந்துகொண்டே இருக்கின்றது. பூமிக்கு மிகவும் ஸமீபத்தில் வந்தால் ஒருவேளை ஸாதாரணமாகத் தெரிந்தாலும் தெரியலாம். ஸூர்யனுக்கும் இந்த வால் நக்ஷத்திரத்திற்கும் பொதுவாக ஸுமார் 3,00,00,00,000 மைல் தூரம் இருக்கும். இப்பொழுது இது நாள் ஒன்றிற்கு ஸுமார் 25,00,000 மைல் வீதம் ஓடி வருகின்றது. பூமிக்கு அருகாமையில் வரும்பொழுது இதற்கும் பூமிக்கும் ஸுமார் 2,40,00 000 மைல் தூரம் இருக்கும். இது முதவில் மிருகசீர்ஷ நக்ஷத்திரத்தின் அருகாமையில் மங்கலான நக்ஷத்திரம் போலக் காணப்படுமாம். பின்னர் வானத்தில் இது கொஞ்சம் பரந்து காணப்படுமாம். இத்தருணம் தப்பினால் இதை மறுபடியும் சற்றேறக்குறைய 1987-ம் வருஷம்தான் பார்க்க முடியும்.

* * *

விவசாய வறுமையும் பட்டுப் பூச்சி வளர்த்தலும்.—நம்முடைய விவசாயிகள் வறுமை யடைந்திருப்பதற்கு அநேகங் காரணங்கள் உள. ஆனால் இவ்வெளிமைத்தனத்தை ஒருவாறு குறைப்பதற்கு வழி யொன்றுண்டு. பயிர் நடும் காலத்தில் இவர்களுக்கு இடைவிடாமல் வேலை செய்யும்படியாயிருக்கும், ஆனால் மற்ற காலங்களில் இவர்களுக்கு வேலையில்லை யென்றே சொல்லலாம். அப்பொழுது வீண்காலம் கழிக்காமல் ஏதாவது ஒரு தொழிலைச் செய்தால் அதனால் கொஞ்சம் வரும்படி யடையலாம். பட்டுப் பூச்சி வளர்த்தலை ஒரு தொழிலாகக் கொள்ளலாம். பட்டுப் பூச்சிகளில் மூன்று வகையுண்டு. அவைகாட்டுப் பூச்சி, ஆமணக்கிலை, மாவிலை இவைகளைத்தின்று ஜீவிக்கும் பூச்சி, முசுக்கட்டைச் செடியின் இலையையே உண்ணும் பூச்சி என்பன. ஆமணக்குச் செடியும் மாமரமும் இந்தியாவில் எவ்விடத்திலும் விசேஷமாய் விளையும். ஆகையால் இவைகளின் இலையைத் தின்னும் பூச்சியைச் சுலபமாய் வளர்க்கலாம். மாவிலையைத் தின்னும் பூச்சியின் பட்டுப் பிசின் ஏறியும், கூண்டினின்று பிரித்துச் சுற்றுவதற்குச் சிரமத்தை உண்டுபண்ணின போதிலும் தக்க யந்திரத்தைக்கொண்டு அந்த மேன்மையான பட்டை முற்றிலும் உபயோகிக்கலாம். முசுக்கட்டைச் செடியினிலையையே தின்னும் சைனா அல்லது ஜப்பான் பூச்சியையும் இந்தியாவில் வளர்க்க முடியும். முசுக்கட்டைச் செடி குளிரான காஷ்மீரத்திலும், வறட்சியுள்ள பர்மாவிலும் வளர்க்கப்படுவதனால், அதை இந்தியா முற்றிலும் வளர்க்கலாம். நம்முடைய விவசாயிகள் இப்படிப்பட்ட லாபமுள்ள ஒரு தொழிலைப் பயிர்வேலை யில்லாதகாலத்தில் செய்வார்களானால் அவைகளைக்கொடிய வறுமை தீண்டாது.

* * *

சப்பாத்துக்கள்ளி ஒரு கால்நடைத் தீவனம்.—சப்பாத்துக்கள்ளி முள்ளில்லாமல் வளர்க்கப்படும் பட்சத்தில் கால்நடைகளுக்கு ஒரு நல்லதீவனமாகலாம் என்று ஒரு கிருஷிசாஸ்திரி அபிப்பிராயங்கொள்ள, கால்நடைத் தீவனமின்றி வருந்தும் நம்மிந்தியாவில் இவ்விஷயமாய்ச் சில பிரயத்தனங்கள் நடந்தன. உதாரணமாகப் 'புனாகாட்டில் பார்மில்' சிலர் வெகு பிரயாசைப்பட்டும், கடைசியில் சப்பாத்துக்கள்ளி தீனிக் குதவாது என்ற தீர்மானத்திற்கு வந்தனர். நிற்க, அமெரிக்காவில், காலிபோர்னியா என்ற பிரதேசத்தில் மிஸ்டர் பர்பாங்க என்ற ஒரு தாவரசாஸ்திரி, முள்களும், கெட்டியான நரம்புகளும் இல்லாமல், ஒருவரைச் சப்பாத்துக் கள்ளியை விருத்தி செய்திருப்பதாகக் கேள்விப்பட்டுக் கீழ் வங்காளத்திலுள்ள தென் சில்ஹெட்டில் இவ்வகையான சப்பாத்துக்கள்ளி தருவிக்கப்பட்டுப் பயிற்சி செய்யப்பட்டு வருவதாகத் தெரியவருகிறது. இக்கள்ளியில் முள்ளில்லாமலிருப்பதுடன், எக்கர் ஒன்றுக்கு வருஷா வருஷம் 100 முதல் 200 டன் வரையில் தீவனத்திற்குரிய கள்ளி விளைகிறதாம். இந்தியாவில் கால்நடைத் தீவன விஷயம் நம்மை வருத்திக்கொண்டிருப்பதாலும் இக்கள்ளியால் கால் நடைகளின் கஷ்டம் நிவர்த்தியாகலாம் என்ற நம்பிக்கை யுண்டாவதாலும், பாரஸ்ட் உத்தியோகஸ்தர்களும், தாவர சாஸ்திர நிபுணர்களும், தென்சில்ஹெட்டில் நடந்துவரும் பரிசோதனையை ஆவலுடன் கவனித்து வருவார்களென்று உறுதியாக நம்பப்படுகின்றது.

* * *

மண் எண்ணெய்.—உலகத்தின் நானாபாகங்களிலும் காலாகாலங்களில் காடுகளிலுள்ள ஏராளமான பெரிய மரங்கள் விழுந்து மண்ணோடுசேர்ந்து பூமிக்குள் பென்னம் பெரிய பர்வதம்போல பார்ப்பாராய்ப் புதைந்திருக்கின்றன. இந்த மரச் சிதைவுதான் நிலக்கரி என்பது. கரியிலிருந்து ஒருவித திராவகமானது தண்ணீர் போலக் கசிந்து ஊறுகிறது. அதுதான் மண்ணெண்ணெய். இந்த எண்ணெயா

னது உலகமுழுவதிலும் இருந்த போதிலும் ஐம்பது
வருஷங்களுக்கு முன்னேதான் அதைக் கண்டுபிடித்
தார்கள். அமெரிக்க இந்தியர் அதை வெகு காலத்
துக்கு முன்னே கண்டறிந்து அதை வாதம், குளிர்க்
காய்ச்சல் முதலிய வியாதிகளுக்கு மருந்தாக உபயோ
கித்து வந்தார்கள். மண் எண்ணெயின் உற்பத்தி
ஸ்தானங்கள் சாதாரணமாய்ப் பள்ளத்தாக்குக
ளேயாம். அது இருக்குமிடத்தை அதைச்சுற்றிலு
முள்ள ஆகாயத்திற் விசேஷித்த வாசனையினாலும்,
அங்குள்ள தண்ணீரில் தோன்றும் எண்ணெய் மய
த்தினாலும் அறியலாம். அமெரிக்காவில் மண்ணெண்
ணெய் எடுக்கிற நாட்டிற்குப் பென்சில்வேனியா
என்று பெயர். மண்ணெண்ணெயிருக்குமிடத்தில்
உயரமான இருப்புக்கிராதிகளை நாட்டி அவற்றினரு
கில் ஒரு சிறு குடிசைகட்டுவார்கள். அந்தக்குடிசைக்
குள் ஒரு யந்திரத்தைவைத்துக் கிராதியுடன் இசைத்
துச் சில இடங்களில் வெகு ஆழமாய்ப் பூமியைத்
தோண்டுவார்கள். சில ஸ்தலங்களின் சமீபத்திலே
எண்ணெய் இருக்கும் இதனால் அங்குள்ள ஏழைக
ளான அநேக ஜனங்களுக்கு நல்லவேலை இருக்கிறது.
பணக்காரரும் அதில் பணம் போட்டுப் பெருந்திரவி
யம் திரட்டுகிறார்கள். மண்ணெண்ணெய் இருக்
கிற கூடுகள் திடீரென்று பெரிய பட்டணங்களாய்
எழும்பி எண்ணெய் வற்றினவுடன் அழிந்துபோ
கின்றன

நமது நாட்டுக்கு அமெரிக்காவிலிருந்தும் ருஷியா
விலுமிருந்தும் பர்மாவிலிருந்தும் மண்ணெண்ணெய்
வருகிறது. இந்த எண்ணெயில் பல தரங்களுண்டு.
தரங்களுக்குத் தக்கதாக விலையும் வித்தியாசப்படும்.
உயர்தர எண்ணெய் உபயோகிப்பதால் அதிக தீங்
கொன்றும் சம்பவியாது. தாழ்ந்ததரத்தெண்ணெய்
ஏராளமான புகையை யெழுப்பி ஆகாயத்தை அசுசி
யாக்குவதுடன் மற்றும் பல தீங்குகளும் விளைவிக்கி
றது. ஆதலால் சிறிது விலை கூட்டிக்கொடுத்து உயர்
தர எண்ணெய் வாங்கி உபயோகிப்பதே உத்தமம்.

நமக்கு நூதனமாய்ப் புகைவண்டி, புகைக்கப்பல்
மின்தபால் முதலியவைகள் கிடைத்திருப்பதுபோல்
இந்த மண்ணெண்ணெயும் கிடைத்திருக்கிறது.
அதின் விலை இலகு, அதின் பிரகாசமோ அதிகம்.
மேலும் அது துர்வாடைகளை அகற்றக்கூடியதாக
வும் இருக்கிறது. அது தேசத்திலே அதிகமாய்ப்
பரவினபோதிலும் பழைய எண்ணெய்களின் விலை
முன்னைப் போலவும் அதற்கதிகமாகவு மிருக்கிறது.
அது வரவில்லையானால் நமது பழைய எண்ணெய்
கள் ஒருதுட்டுக்கு ஒரு சொட்டென்றாகிவிடும்.

* * *

தண்ணீரைப் பரீக்ஷிக்க.—அநேக இடங்களில்
குடிக்கத்தகுந்த சுத்த சலம் அகப்படுவதில்லை. அதிக
அசுத்தமான சாக்கடைச் சலங்களின்சாரம் சில
கிணறுகள், குளங்கள், ஆறுகள் இவைகளின் சலத்
தில் கலந்திருப்பதுண்டு. இந்தமாதிரிச் சலத்தைக்
குடிப்பது தேகத்துக்குப் பல வியாதிகளை உண்டாக்
கும். சலத்தில் அசுத்தம் கலந்திருக்கிறதாவென்று
அறிவதற்குக் கீழே சொல்லியிருக்கும் பரீட்சையைச்
சோதித்துப் பார்க்கலாம். எந்தச்சலத்தைப் பரிசோ
தனை செய்யவேண்டுமோ அதை ஒரு சுத்தமான
வெள்ளைப்போத்தலில் நிறைய ஊற்றவேண்டும்.
அந்தப்போத்தலில் கொஞ்சம் சர்க்கரையைச் சேர்த்
துக் காற்றுப்போகாதபடி நன்றாய் அடைத்து மூடி
விடவேண்டும். இந்தப் போத்தலை வெயிலில் இர
ண்டு மூன்று நாட்களுக்கு வைக்கவேண்டும். போத்
தலிலுள்ள சலம் சாதாரண சலம்போல் இருந்தால்
அசுத்தம் இல்லை. பால்போன்ற நிறமாகிவிட்டால்
அசுத்தம் கலப்பு என்று ஊகிக்கவேண்டியது.

* * *

கொசுகுகளைப்பிடிக்க.-சாதாரணமாய்க் கொசுகு
பகலில் மனிதர்களைத் தொந்தரவு செய்கிறதில்லை.
இரவிற்தான் சனங்களைத் தூங்கவொட்டாமற் கடிக்
கிறது. இதற்குக்காரணம் என்னவென்றால், கொ
சுகுகள் சூரியவெளிச்சங் கண்டவுடன் வெளிச்சத்
தைவிட்டு ஒடி, வீட்டு அறைகளிற் குளிர்ச்சியான
இடத்திற் போய் மறைந்துகொள்ளும். இந்தச்
சுபாபத்தையறிந்து இந்திய அரசாட்சியிற் சிற்றுயிர்
லட்சண சாஸ்திரியாயிருக்கும் மர்க்ஸ்வேல் லீப்ராய்
என்பவர் கொசுகுகளைப் பிடிக்க ஒரு சுலபமான வழி
கண்டு பிடித்திருக்கிறார். ஒரு அடி நீளம் ஒன்பது
அங்குல அகலமுள்ள ஒரு சிறிய பெட்டிக்குக் கீல்
வைத்து மேல்மூடி போடவேண்டும். இந்தப்பெட்டி
மேல்மூடியில் ஒழு சிறு துவாரஞ்செய்து அதை
இழுத்து மூடும்படியாய்ச் சிறிய சொருகுபலகை
வைக்கவேண்டும். பெட்டியின் அடிப்புறத்திற் தக
ரம் போட்டுப் பச்சைக் கம்பளி போட்டுவைக்கவே
ண்டும். இப்படிச் செய்த பெட்டியைக் காலையி
லெடுத்து, வீட்டு அறையிற் குளிர்ச்சியானவிடத்தில்
மூடியைத்திறந்து வைத்துவிடவேண்டும். கொஞ்ச
நேரங்கழித்து மூடியைச் சாத்திவிடவேண்டும்.
பின்பு பென்சீன் என்று சொல்லப்பட்ட திராவகத்
திற் கொஞ்சமெடுத்துப் பெட்டி மூடியிலுள்ள சிறுத்
துவாரத்தின் வழியாய் உள்ளேவிட்டுச் சொருகு
பலகையை இழுத்து மூடி விடவேண்டும். இப்படி
ஒருமாதஞ் செய்ததில் 2300 கொசுகுகள் பிடிக்கப்
பட்டனவாம். இப்படிச் செய்வதாற் கொசுகுகள்
தொந்தரவு முழுமையுந்தீருமென்று தோன்றவில்லை.
ஒருக்கால் கொஞ்சங் குறையலாம். மேலே சொல்
லியபடி செய்வதில் அதிகம் செலவாகாது. ஆகை
யால் அதைச் செய்துபார்க்கலாம்.

# சிறந்த தமிழ்ப் புத்தகங்கள்

இவை யாவராலும் புகழ்ப்பெற்றது. அநேகம் பாடசாலைகளிலும் பாடப்புத்தகமாக உபயோகப் பட்டு வருகின்றன. மிகவும் சுலபமான நடையில் எழுதப்பட்டிருக்கின்றன.

ஸ்ரீராமாயண வினுவிடை, 2-ம் பதிப்பு.— ரூ. அ. இதில் அநேக நூதனமான விஷயங்கள் ஒழுங்குபடுத்திச் சேர்க்கப்பட்டிருக்கிறது. ஆனந்த ராமாயணம், அத்யாத்ம ராமாயணம் இவைகளிலிருந்து எடுத்தெழுதிய சுருக்கமும் ராமாயணத்தின் உட்பொருளும் அடங்கியது. 226-பக்கங்கள் கொண்டது. ஸ்ரீராம பட்டாபிஷேக படத்துடன். ... ... ... ... 0 12 0

ஸ்ரீமகாபாரத வினுவிடை, முதல்பாகம்.— இதில் ஆதி, ஸபா, ஆரண்ய, விராட, உத்தியோக பர்வங்களடங்கியது. புதிப் பதிப்பு. இப்பதிப்பில் சிற்சில சீர்திருத்தங்களும் ஒழுங்குகளும் புதிதாகச் செய்யப் பட்டிருக்கிறது. பீடிகையில் சிற்சில பாகங்கள் புதிதாக ஸம்ஸ்கிருத பாரதத்திற்கு ஏற்பமாற்றி எழுதப்பட்டிருக்கிறது. ஒவ்வோர் பர்வ ஆரம்பத்திலும் அவ்வவ்விடத்தில் வில்லிபுத்தூரார் எழுதியுள்ள காப்பு செய்யுளை அமைக்கப்பட்டிருக்கிறது. முடிவில் எழுதியுள்ள அனுபந்தத்தில் தமிழ்ப் பாரத்திலுள்ள புதிய கதைகளைச் சுருக்கமாகஎடுத்து எழுதப்பட்டிருக்கிறது ... 0 12 0

ஆரியமத உபாக்கியானம், 3-ம் பதிப்பு.— உயர்ந்த தர்மங்களைத் தெளிவாய் எடுத்துக்காட்டும் 50-இனியகதைகள் கொண்டது. ஒவ்வோர் கதையும் நமது புராணங்களிலிருந்தே எடுத்து எழுதியது. ஒவ்வொரு கதையும் ஒவ்வொரு நீதியை நன்கு விளங்குகிறது. ... ... ... 0 2 0

ஸ்ரீ மஹா பாரத வினுவிடை, 2-ம் பாகம் இதில் பீஷ்ம, துரோண, கர்ண, சல்லிய ஸௌப்திக, ஸ்திரீ பர்வங்களடங்கியது. மிகவும் இனிய நடையில் எழுதப்பட்டது. ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா, அர்ச்சுனனுக்குக் கீதை உபதேசம் செய்யும் பாகம் மிகவும் அழகாய் வர்ணிக்கப்பட்டிருக்கிறது இத்தகைய புத்தகம் ஒவ்வோர் ஹிந்துக்கள் வீட்டிலும் அவசியமிருக்கவேண்டும்.... 0 12 0

குறிப்பு.—மேற்குறித்த புத்தகங்களைத் தவிர, இன்னும் எங்களிடம் அநேக விதமான தமிழ்ப் புத்தகங்கள் கிடைக்கும். கிரய ஜாப்தா வேண்டிவோர் ½-அணு ஸ்டாம்பு அனுப்பினுல் உடனே அனுப்பப் படும்.

| | ரூ. அ. பை. |
|---|---|
| பிரதாப முதலியார் சரித்திரம ... | 1 0 0 |
| மதிமோசவிளக்கம் ... ... ... | 0 12 0 |
| அராபிநைட் கதை படங்களுடன் ... | 2 8 0 |
| மஹாராஜா துறவு ... ... | 0 6 0 |
| விபின சந்திரபாலர் உபன்யாஸம் ... | 0 8 0 |
| குணசீலன் ... ... ... | 0 10 0 |
| கமலாம்பாள் சரித்திரம் ... ... | 1 4 0 |
| தேவலோக கிரிமினல் கேஸ் ... ... | 1 8 0 |
| களாபூர்ணோதயம் ... ... ... | 0 10 0 |
| விக்டோரியா சரித்திரம் ... ... | 1 4 0 |
| பிரபு லிங்கலீலை (வசனம்) ... ... | 0 12 0 |
| விநோதரஸமஞ்சரி ... ... ... | 1 2 0 |
| தானவன் எனும்போலீஸ் நிபுணன் கண்டு பிடித்த அற்புதக்குற்றங்கள் ... ... | 1 0 0 |
| கைவல்லிய நவநீதம், மூலமும் உரையும் ... | 1 0 0 |
| சிவமஹாபுராணம் 48 படங்களுடன் ... | 5 0 0 |
| நாலடியார் மூலமும் உரையும் ... ... | 1 2 0 |
| ஸ்ரீபக்த லீலாம்ருத வசனம் ... ... | 3 0 0 |
| ஸ்ரீ விவேகாநந்த விஜயம் ... ... | 1 4 0 |
| நைடதம் மூலமும், உரையும் (படங்களுடன்) ... ... ... ... | 2 0 0 |
| நீதிவிவாதமஞ்சரி (இந்தியன் பினல் கோட் சட்டம் சாக்ஷி சட்டம், அடி தண்டனைச் சட்டம், இவை வியாக்கியானத்துடன் ... ... ... | 2 8 0 |
| மாணிக்கவாசக சுவாமிகள் திருவாய் மலர்ந்தருளிய திருவாசகம் ... ... | 1 0 0 |
| பிரபோத சந்திரோதய வசனம் ... | 1 0 0 |
| பக்த விஜயம் முதல்பாகம் ... ... | 2 0 0 |
| டை 2-ம் பாகம் ... ... | 2 0 0 |
| டை 3-ம் 4-ம் பாகங்கள் ... | 2 0 0 |
| தேகதத்வசாஸ்திரம் படங்களுடன் ... | 2 8 0 |
| கலாவதி ... ... ... ... | 1 8 0 |
| ரூபாவதி ... ... ... ... | 1 0 0 |
| மதிவாணன் ... ... ... | 0 6 0 |
| சிதம்பரம் இராமலிங்க சுவாமிகள் திருவருட்பா 6-திருமுறையும் ... ... | 3 0 0 |
| கருட புராணம் வசனம் படத்துடன் ... | 0 8 0 |
| தேவி பாகவதம் ... ... ... | 3 12 0 |
| நவக்ரகஸ்தோத்ரம் அஷ்டோத்தர அர்ச்சனை தமிழ் சுலோகம் தமிழில் அர்ச்சனை நாமம் அச்சடிக்கப்பட்டிருக்கிறது. ஒவ்வொருவரும் படிக்கவேண்டியது ... ... | 0 2 0 |
| சிவஸஹஸ்ர நாமம் சுப்பிரமணியர், கணபதி லலிதா இவர்களுக்கு அஷ்டோத்தரம், தமிழ் சுலோகம் தமிழில் அர்ச்சனை ஒவ்வொருவரும் வாங்கி அர்ச்சிக்கவேணும் | 0 4 0 |
| தேசிகப்ரபந்த வ்யாக்கியானம் ... ... | 3 0 0 |

ஜனரல் ஸப்ளைஸ் கம்பெனி,
மைலாப்பூர், மதராஸ்.




* * * மாணிக்கக் கற்கள் சிதறியதும் * * * அரசன் தலைசாய்ந்துயிர்போயதும்,
காலம் ஒன்றுதான் * * * (ஸ்திரீகளுக்கான பக்கத்தில் பக்கம் 229-பார்க்க.)

# விவேக போதினி

"எப்பொருள் எத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"——திருவள்ளுவர்

தொகுதி II } ஸௌம்ய௵ தை௴ 1910-௵ ஜனவரி௴ { பகுதி 7


## ஆராதனை: சிறப்பான பிரிவுகள்

### WORSHIP: SPECIAL DIVISIONS

**ஆ**ராதனைகளைச் சிறப்பாக நோக்கில் (அதாவது அவைகள் சென்றடையும் பொருளை உத்தேசித்து நோக்கில்) பின்வரும் நான்கு பிரிவுகளை உடைத்தாயிருக்கின்றன. அவையாவன, பரம்பொருள் ஆராதனை, இஷ்டதேவதா ஆராதனை, ஆசார்ய ஆராதனை, பிதிர்க்கள் ஆராதனை ஆகிய இவைகளே. இவைகளுள் முறையே பின்னதைவிட முன்னது சிறந்தது. இவைகளில் எங்கிருந்து ஒருவன் தொடங்கினாலும், முடிவிற்குப்போகும் வரையில் அவனுக்குத் திருப்திவரக்கூடாது. இவ்வாறின்றி எதாவது ஓர் நிலையில் நின்றுவிடுவது மேன்மையன்று.

பிதிர்க்கள் ஆராதனம் என்பது நாம் நமது தாய் தகப்பன் முதலிய பந்துக்களுக்குச் செய்யும் சிரார்த்த தர்ப்பணாதிகளே. இவைகள் நமது ஸனாதன தர்மத்தைப் பின்பற்றுவோர், ஒவ்வொருவரும் அவசியம் செய்யவேண்டியவை. இவைகளால் உண்டாகக்கூடிய ஸந்ததிவிருத்தி ஐசுவர்யவிருத்தி முதலியவைகளை நாம் கவனியாது இவைகளை அவசிய கர்மங்களாகச் செய்து வந்தால்தான் நாம் கர்மபந்தத்திலிருந்து எளிதில் விடுபடலாம்.

ஆசார்ய ஆராதனம் என்பது நமக்கு ஞானோபதேசம்செய்த குருவை ஆராதனம் செய்தல். குருவைக் கண்ணுக்குப் புலப்படும் ஈசனாக எண்ணி வழிபடும்படி சாஸ்திரங்கள் விதிக்கின்றன. தேகத்தைக் கொடுத்து உதவிய தாய்தந்தையரைவிட மானிட ஜன்மத்தின் முடிவாகிய மோக்ஷத்தை அடைய ஸஹாயம் செய்யும் ஞானத்தை உபதேசித்தருளிய குருவே மேலானவர். ஸ்ரீமத் சங்கரபகவத்பாதாள், ஸ்ரீமத் ராமானுஜாசாரியர், ஸ்ரீ மத்வாசாரியர், ஸ்ரீமத் நீலகண்டசிவாசாரியாள் முதலிய ஸமயாசாரியர்களை ஆராதிப்பதும் இந்தப் பிரிவைச்சேர்ந்தது. ஆனால் இவர்களை ஆராதிப்பது ஒருவேளை மதத்வேஷாதிகளைக்கொண்டு விடுவதால் இது இஷ்டதேவதாராதனத்தை விடத் தாழ்ந்தது என்று கூறப்பட்டது. ஆனால் ஆசார்ய ஆராதனையில், பரம ரகஸ்யத்தைப் பக்குவம் அறிந்து வெளியிட்டு ஒருவனை ஞானானந்த அனுபவத்தில் முழுத்திவைக்கும் ஸத்குரு ஆராதனையை அடக்கினால், இந்தப் பாகத்திற்கும் பரம்பொருள் ஆராதனைக்கும் பேதமே இல்லை. அவ்வளவு சிறந்தது இந்தப் பாகம்.

இஷ்டதேவதா ஆராதனம் என்பது, பரம்பொருளைத் திருமூர்த்திகள், அவர்கள் அவதாரங்கள் இவைகளுள் எந்த மூர்த்தியையாவது தன் மனதிற்குப்பிடித்த தேவதையாகக்கொண்டு ஆராதிப்பது. இதனுள் எல்லா தேவதா ஆராதனத்தையும், யஞ்ஞாதிக்ருதுக்களையும் பலவித பக்திகளையும் அடக்கிவிடலாம். இந்த ஆராதனையின் முக்கிய கோட்பாடு யாது எனில் 'எல்லாத் தேவதைகளையும் தனது இஷ்ட தேவதையாகப் பாவித்து ஒருவன் வணங்கவேண்டும்' என்பதே. இதைத்தான் ஔவை 'தெய்வமிகழேல்' என்றாள். இதை மறந்தபொழுது இந்த ஆராதனம் மதத்வேஷத்தை உண்டாக்கி ஒருவனைக் கெடுத்துவிடும்.

முடிவில் இருப்பதாகிய ஆராதனமே பரம்பொருள் ஆராதனம். இதற்கே பரபக்தி என்றும் ஞானநிஷ்டை என்றும் பெயர். இதில் மூர்த்திபேதாதிகளே இரா. வெளிச் செல்லுவதே இப்பொழுது குணமாக உடைய மனம் அடங்க, நாம் என்ற எண்ணமே இராது. பரம்பொருள் (நித்யவஸ்து) மாத்திரமாக சேவித்து நிற்பதே இந்த ஆராதனையின் ஸ்வரூபம். இதற்கும் ஸத்குரு ஆராதனத்திற்கும் பேதமேயில்லை. தீவ்ர மோக்ஷாபேக்ஷையே இதற்குத் தகுந்த ஸாதனம்.

விவேக போதினி

தொகுதி 2] ஸௌம்ய௵ தைமீ [பகுதி 7

## கர்மகாண்டம்-யாகம்

### KARMAKANDA—YAGAS

யாகம் என்பது கர்மகாண்டத்தில் கூற பட்டுள்ள கர்மங்கள் எல்லாவற்றிலும் மிக முக்கியமானது. இதற்கு ஆராதனை என்பது பொருள். யாகத்தில் பாகம் வாங்க அழைக்கும் பல தேவதைகள் மூலமாகப் பரம்பொருளை ஆராதிப்பதே யாகத்தின் நோக்கம். இந்த நோக்கத்தை யாகம் உடைத்தாயிருத்தலால், யாகம் என்ற பதத்திற்குப் பரம்பொருள் என்ற ஒரு பொருளும் ஏற்பட்டுவிட்டது. இந்தப்பொருளை உள்ளடக்கித் தான் புருஷஸூக்தத்தில் 'தேவர்கள் யஞ்ஞத்தை யஞ்ஞத்தால் ஆராதித்தார்கள்' என்று சொல்லப்பட்டிருக்கிறது. இதில் முதலில் உள்ள யஞ்ஞத்திற்குப் பரம்பொருள் என்றும், இரண்டாவது யஞ்ஞத்திற்கு யாகம் என்றும் பொருள். இதில் ஆராதனை முக்கியமே ஒழிய, பிராணி ஹிம்ஸைகள் முக்கியமன்று.

யாகங்கள் அநேகவிதம். அவைகளுள் த்விஜன் அவசியம் செய்யவேண்டியதாயும், பொதுவாக யாகலக்ஷணங்கள் எல்லாம் அமைந்ததாயும் உள்ள ஸோமயாகத்தை எடுத்து விஸ்தரிப்போம்.

ஹிமாசலச்சாரலில் அகப்படக்கூடிய ஸோமக்கொடியினது சாற்றைப்பிழிந்து தேவதைகளுக்கு அர்ப்பிதம் செய்து, இந்த யாகத்தில் குடிக்கப்படுவதால் இந்த யாகத்திற்கு ஸோமயாகம் என்று பெயர். நமது தேசமாகிய தக்ஷிணதேசத்தில் இந்தக் கொடி அகப்படாததால், இதைப்போன்றதாக உள்ள வேறொரு செடியை இங்கு உபயோகப்படுத்தி வருகிறார்கள். யாகம் நடத்துவதற்கு வேண்டிய விஷயங்கள் எல்லாவற்றையும் ஓர் பெரிய பந்தலுள் சேர்த்து வைப்பது வழக்கம். இந்தப் பந்தலுக்கு யாகசாலை என்று பெயர். இந்தப் பந்தலுள் யாகம் நடக்கும் இடத்தில் உயர்ந்த படிபோன்ற கட்டிடம் கட்டப்பட்டிருக்கும். இதற்கு யாகவேதி என்று பெயர். இது விசித்திரரூபங்கள் அளவுகளுடன் கட்டப்பட்டிருக்கும். இது கட்ட ஏற்பட்டிருக்கும் விதிகளிலிருந்து தான் நம் முன்னோருக்கு க்ஷேத்ரகணிதம் நன்றாகத் தெரியும் என்பது வெளியாகின்றது.

இந்த யாகம் ஐந்துநாள் நடக்கவேண்டியது. இவ்வைந்து நாள்களிலும் யாகம் செய்பவனாகிய யஜமானனும் அவன் பத்னியும் உபவாஸம் விருதம் முதலியவைகள் அனுஷ்டித்துக்கொண்டு பரிசுத்தராக இருத்தல்வேண்டும். யாகசாலைப் பிரவேசமாவதற்குமுன் யஜமானனும் அவன் பத்னியும் வயிறாரச் சாப்பிட்டுவிடவேண்டியது. யாகம் நடக்குங்கால் முதல்நாள் பசுவின் ஒரு முலைக்காம்பில் ஒருதரம் கறந்தால் எவ்வளவு பால் வருமோ அதுதான் யஜமானனும் அவன் பத்னியும் உட்கொள்ளவேண்டியது. அடுத்தநாள் இருமடங்கு, இதுபோல ஒவ்வொருநாளும் இவர்கள் ஆஹாரம் அதிகமாக்கப்படும். ஐந்தாம்நாள் நடக்கும் அவபிருதஸ்நானத்திற்குப் பின் இவர்கள் முன்போல சாப்பாடு உட்கொள்ளலாம்.

யஜமானன் யாகசாலையுள் பிரவேசிக்கும் முன்னர், க்ஷௌரம் செய்துகொண்டு ஸ்நாநம் செய்யவேண்டியது. அவன் புது வேஷ்டி கட்டிக்கொண்டு மான் தோலைப் போர்த்துக் கொள்ளவேண்டியது. அதையே அவன் படுக்கையாக இரவில் உபயோகப்படுத்திக்கொண்டு எவ்வளவு தூக்கம் அவசியமோ அவ்வளவுதான் தூங்கவேண்டியது. அதிகமாகத் தூங்கவே கூடாது. தலைப்பாகை, தடி முதலியவைகளை அவன் வைத்துக்கொள்ளவேண்டியது. மேலே

எங்கேயாவது தினவு எடுத்தால் சொறிந்து கொள்ளுவதற்காக ஒருமான் கொம்பைக் கையில் வைத்துக்கொள்ளவேண்டியது. வெறுங் கையை இவ்விஷயத்தில் உபயோகப்படுத்தவே கூடாது. இவன் பத்னி, யாகம் தொடங்கும்முன் கையிலிருக்கும் நகங்களை நன்றாக எடுத்துவிடவேண்டியது. இவளும் ஸ்நானம் செய்து புது ஆடை தரித்து பரிசுத்தப் படுத்திக்கொள்ளவேண்டியது. இவள் தன் தலையில் ஓர் பக்கத்தில் ஓர் தங்கக் குண்டை கட்டித் தொங்கவிட்டுக்கொள்ளவேண்டியது.

யாக தீக்ஷிதனாவதற்கு முன் யஜமானன் ஓர் பிராம்மணனை அழைத்து, வேதம் உணர்ந்த பிராம்மணரிடம் தான் யாகம் செய்யப்போகிறதைத் தெரிவித்து அவர்களை யாகத்திற்கு அழைத்து வரும்படி ஏவுவான். இந்தத் தொழிலைச் செய்பவனுக்கு ஸோமப்ரவாகன் என்று பெயர். இவன் ஓர் அத்வர்யூவிடம் சென்று, யஜமானன் பெயரைச் சொல்லி 'இவர் யாகம் செய்யப்போகிறார், உம்மை அதில் அத்வர்யூவாகவிருந்து ஸஹாயம் செய்யும்படி விநயத்துடன் பிரார்த்தித்தார்' என்று கூறுவான். 'இதற்குத் தக்ஷிணை என்ன?' என்று அத்வர்யூ கேட்க, ஸோமப்ரவாகன் '21-பசு' என்று சொல்லுவான். இதன் பின்னர் அவன் யஜமானனுக்கு அக்னி ஆதானம் முதலிய ஆரம்பகர்மங்கள் இன்னாரால் செய்து வைக்கப்பட்டன, இவ்வளவு பிராம்மணர்கள் அதற்கு வந்திருந்தனர், அவர்களை யஜமானன் இவ்வாறு நடத்தினான், என்பவைகளை விசாரித்து யஜமானனது நடத்தை இத்தன்மையது என்று அவன் தெரிந்துகொள்ளுகிறான். யஜமானன் நடத்தை நல்லதாக இருப்பதாகத் தோன்றாவிட்டால், அத்வர்யூ ஸ்தானத்தை அவன் அங்கீகரிக்கவே மாட்டான். தக்ஷிணையைவிட நடத்தை பிரதானம் என்ற கோட்பாட்டைப் பிராம்மணர்கள் எல்லோரும் முன் காலத்தில் பின்பற்றி நடந்து வந்தார்கள். கால வித்யாஸத்தால் பெரும்பாலும் இந்தக் கோட்பாட்டை ஒருவரும் பெரிதாக இப்பொழுது எண்ணுவதில்லை.

அத்வர்யூ கிடைத்ததும் ஸோமப்ரவாகன் மற்றைய ஸ்தானங்களுக்கு வேண்டிய பிராம்மணர்களை எளிதில் நியமித்துவிடுவான். அத்வர்யூ, ஹோதா, உத்காதா, பிரம்மா ஆகிய இந்த இடங்களில் அமருபவர், தமக்குக் கீழ் உதவியாக மும்மூன்று பிராம்மணர்களை ஏற்படுத்திக் கொள்ளுவார்கள். இதுவும் அல்லாமல் வத்ஸ்யன் என்ற ஒரு பிராம்மணனும் நியமிக்கப்படுவான். இவன் எல்லாவற்றையும் மேல் பார்வை பார்க்கவேண்டியது. ஆகவே ஸோம யாகத்திற்கு 17-பிராம்மணர்கள் ஸஹாயம் வேண்டும். இவ்வாறு 17-பெயர்கள் நியமித்து முடிந்ததும், யஜமானனும் அவன் பத்னியும் யாகசாலையைப் பிரவேசம் செய்வார்கள். உடனே யாகதீக்ஷை தொடங்கிவிடுகிறது. யஜமானனும் அவன் பத்னியும் யாகம் முடியும்வரையில் குளிக்கவே கூடாது. பல்கூடத் தேய்க்கக்கூடாது. கொஞ்சம் பாலையே ஆஹாரமாக உட்கொண்டு வரவேண்டும். இரவில் அதிகமாகத் தூங்கக்கூடாது. இதுதான் ஸோமயாகத்தில் முதல்நாள் வேலை.

இரண்டாம்நாள் நடக்கும் கர்மத்திற்கு ப்ரவர்க்யம் என்று பெயர். இதுதான் யாகத்தையே மேன்மைப் படுத்துவது. இதனால்தான் யாகம் என்பது பரம்பொருளுக்கு வேறொரு பெயரே ஒழிய வேறல்ல என்பது தெரியவருகின்றது. இரண்டாம்நாள் ஆரம்பத்தில் உபஸத் என்ற ஓர் ரக்ஷையான கர்மம் ஒன்று செய்யப்படுகிறது. யாகத்தில் கொடுக்கப்படும் ஆஹுதிகளை அஸுரர்கள் கொண்டுபோகாமலிருப்பதற்காகவும், யாகத்திற்கு அஸுரர்களால் தடை ஒன்றும் வாராமலிருப்பதற்காகவும் இதைச் செய்வது. மேலும் ஒவ்வொரு ஆஹுதி கொடுக்கும்பொழுதும் அது ஸரிவர தேவதைகளிடம் போய்ச் சேருவதற்காக ஓர் ரஹஸ்ய அக்ஷரத்தையும் உச்சரிப்பது உண்டு. இந்தக் கர்ம

மானது 'உலகில் நல்ல விஷயங்களில் பாடுபடத் தொடங்குபவர்கள் எவ்வளவோ கெட்ட விஷயங்களால் தடுக்கப்படுவார்கள். அவர்கள் அதற்கு வேண்டிய ஜாக்கிரதையுடன் கெட்டவிஷயங்கள் அணுகவொட்டாது நல்ல காரியங்களைச் செய்துமுடிக்க வேண்டியது' என்ற அரியவிஷயத்தைக் குறிப்பிக்கின்றது.

யாகம் நடந்து வருங்காலத்தில் அந்த விஷயத்தில் அதிகத் தேர்ச்சியுடைய அத்வர்யூ இன்ன ஆஹுதிக்குப்பின் இன்ன தேவதைக்கு ஆஹுதி கொடுக்கவேண்டும் என்றறிந்தவனாகையால், ஹோதாவை நோக்கி இன்ன தேவதையை அழைத்து இந்த ஆஹுதியைக் கொடு என்று ஒழுங்காகக் கட்டளையிட்டுக்கொண்டுவருவான். இந்த உத்திரவு பிறந்ததும், வந்து கூடும் அஸுரர்களை ஒதுக்க ஆக்னீத்ரன் என்ற ஸ்தானத்தில் இருப்பவன் ஓர் ரஹஸ்ய அக்ஷரத்தை உச்சரிப்பான். ஹோதா அந்த ஸமயத்தில் சொல்லவேண்டிய ருக்கைச் சொல்லி ஆஹுதியைவிட்டு அஸுரர்களைத் தடுக்கும் அக்ஷரத்தை உச்சரிப்பான். இந்த ஸமயத்தில் காலையிலேயே நன்றாகப் போஜனம் செய்து திருப்தி அடைந்து, புஷ்பம், சந்தனம் முதலிய வஸ்துக்களால் அலங்காரம் செய்யப்பெற்று உத்காதாவும் அவன் கீழிருக்கும் மூன்று பிராம்மணர்களும் ஆஹுதி வாங்கவரும் தேவதைகளை அவரவர்களுக்குத் தகுந்த ஸாமகானம் செய்து திருப்திப்படுத்துவார்கள். மற்றைய பிராம்மணர்கள் அன்று செய்யவேண்டியவை முடிந்ததும் தான், போஜனம் செய்யவேண்டியது.

மூன்றாம்நாள் இரண்டு கர்மங்கள் செய்யப்படுகின்றன. முதல் கர்மத்திற்கு மத்ய உபஸத் என்று பெயர். இதனால் அஸுராதிகளை ஓட்டுவது. இரண்டாவது யாகவேதிகள் யூபஸ்தம்பங்கள் ஆகிய இந்த வஸ்துக்களை உபயோகப்படுத்தத் தொடங்குவது.

நான்காம்நாள் தான் பிராணிவதம் நடக்கும் தினம். அன்று மூன்று ஆட்டைக் கொல்லுவது. முதல்ஆடு அக்னிக்கும் ஸோமனுக்கும், இரண்டாவது, த்விஜத்வத்திலிருக்கும் அசுத்தியை நீக்குவதற்காக அச்வினீ தேவதைகளுக்கும், மூன்றாவது, மூன்று தலைமுறையாக ஸோமயாகம் செய்யாதிருந்ததனால் தன் குடும்பத்திற்கு ஏற்பட்டிருக்கும் இழிவைத் தொலைப்பதற்கும், கொல்லப்படுகின்றது (இந்த மூன்றாவது ஆடு அவசியம் இருந்தால்தான் கொல்லவேண்டும்). இந்த மூன்றாவது ஆடு யாகத்தில் முக்கிய தேவதைகளாகிய இந்திரன் அக்னி இவர்களுக்காகக் கொல்லப்படுவது.

கடைசி நாளாகிய ஐந்தாம் நாள்தான் ஸோமரஸத்தைப் பிழிந்து குடிப்பது. ஆதலால் இதற்கு ஸுத்யஹஸ் என்று பெயர். காலை, நடுப்பகல், மாலை ஆகிய மூன்று நேரங்களிலும் இந்த நாளில் அவசியம் செய்யவேண்டிய கர்மங்கள் உண்டு. இவைகளுக்கு ஸவனங்கள் என்று பெயர். ஐந்தாம் நாள் ஆரம்பத்தில் அக்னிக்கு ஓர் ஆடு பலி கொடுப்பது. அன்று மாலை யஜமானனும் அவன் பத்னியும், அவப்ருதஸ்நாநம் செய்யவேண்டியது. இதனால் அவர்கள் நியமங்கள் முடிவுபெறுகின்றன. இதுமுதல் யஜமானனுக்குத் தீக்ஷிதர் என்ற பெயர் வருகின்றது.

இந்த யாகம் நடக்கும் ஐந்துநாளும் பெரிய பிராம்மண போஜன ஸமாராதனை நடக்கும். ஆயிரம் பேர்களுக்குக் குறையாமல் போஜனம் செய்துவைக்கவேண்டும். ஏழைகளுக்குத் தங்கு தடையின்றி பணம் முதலியன கொடுக்கப்படவேண்டும். யாகத்தில் கொல்லப்படும் பிராணிகளுக்கு உண்டாகும் கஷ்டத்தால் யஜமானனுக்கு வரக்கூடிய பாபங்களைத் தொலைப்பதற்காக இவைகளை எல்லாம்நடத்தவேண்டும். யாகம் நடந்துவரும் நாளில் மாலைநேரங்களில் யாதொரு கர்மங்களும் நடக்கவேண்டியதில்லை. அப்பொழுது யாகம் பார்க்கவந்த பண்டிதர்கள் மஹான்கள் எல்லோரும் யாக

சாலையில் ஸபைகூடி சாஸ்திரவிஷய ஆராய்ச்சி, புராண கதாசிரவணம் முதலிய ஸத்விஷயங்களில் காலம் போக்குவார்கள். (நைமிசாரண்யத்தில் சௌனகாதி ரிஷிகள் செய்த ஸத்ரம் என்ற 12-வருஷ யாகத்தில்தான் ஸூதபுராணிகரால் ஸகல புராணங்களும் சொல்லப்பட்டு வெளியாயின). ஸபையைத் தமது திறமையால் ஸந்தோஷப்படுத்துபவர்களுக்கு ஏராளமான வெகுமதிகளும் கொடுக்கப்படும். யஜமானன் யாகசாலையில் புகுங்கால் திடதேகத்துடன் வாட்டமில்லா திருக்கவேண்டும் என்றும் யாகம் முடிந்து வெளிவருங்கால் ஸகலஸத்தும் அடங்கி வரவேண்டும் என்றும் விதிக்கப்பட்டிருக்கிறது. ஆதலால் நல்ல யௌவன வயதில் தான் ஒருவன் யாகம் செய்ய முயலவேண்டும் என்பது விளங்கும். யாகம் முடிந்து அவபிருத ஸ்நாநமானதும் யஜமானனும் அவன் பத்னியும் பிராம்மணர்களிட மிருந்து ஆசீர்வாதம் பெற்றுக்கொண்டு வீடுகொண்டுபோய் சேர்க்கப்படுவார்கள். அங்கு மிகுந்த கோலாஹலத்துடன் நடத்தப்படும் ஸமாராதனையில் இவர்கள் இருவரும், யாகத்தை நடத்திவைத்த 17-பிராம்மணர்களும் உண்டு பரமானந்தராக இருப்பார்கள்.

இதுதான் ஸோமயாகம் என்று சொல்லப்படுவது. இதில் நடக்கும் கர்மங்களின் உட்கருத்தைப் பின்வருமாறு தைத்ரீய ஆரண்யகத்தில் ஞானியினது நிலையோடு ஒட்டி விஸ்தாரமாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

"ஞானி செய்யும் யஞ்ஞத்தில், (அவன் ஜீவ) ஆத்மாவே யஜமானன்; (சாஸ்த்ரம் குரு உபதேசம் ஆகிய இவைகளில் உள்ள) சிரத்தையே பத்னி; சரீரமே ஸமித்துக்கட்டு (இது இல்லாவிடில் யாகமே நடப்பதரிது.); மார்பே வேதி; ரோமங்களே தர்பங்கள்; சிகையே வேதம் (என்கிற தர்பமுஷ்டி); (திடமான) ஹ்ருதயமே யூபஸ்தம்பம்; காமமே நெய்; கோபமே பசு; (மானஸ) தபஸே அக்னி; (மன) அடக்கமே தக்ஷிணை; வாக்கே ஹோதா; பிராணனே உத்காதா; கண்களே அத்வர்யூ; மனதே ப்ரஹ்மா; காதுகளே ஆக்நித்ரன்; எதுவரையில் (இத்தேகத்தில் உயிர்) தரித்து நிற்கிறதோ அதுவரையில் (யாக) தீக்ஷை; சாப்பிடப்படுவனவே ஹவிஸ்; குடிக்கப்படுவனவே ஸோமபானம்; (நற்காரியத்தில்) ப்ரியமே உபஸத்; (அவனுடைய, (ஸஞ்சாரம், உட்காருதல், எழுந்திருத்தல் ஆகிய இவைகளே ப்ரவர்க்யம்; (அவன்) முகமே ஆஹவனீயாக்நி; (ஸப்த) வ்யாஹ்ருதிகளே ஆஹுதிகள்; (அவன்) விஞ்ஞானமே ஆஹுதி செய்தல்; எவை காலைமாலைகளில் உட்கொள்ளப் படுகின்றனவோ அவைகளே ஸமித்துக்கள்; காலை, நடுப்பகல், மாலை (இவைகளில் செய்யப்படுபவைகளே) ஸவனங்கள்; இரவு பகல் (இவைகளில் செய்யப்படுபவைகளே) பர்வகால யஞ்ஞங்கள்; பக்ஷங்களும் மாஸங்களுமே சாதுர்மாஸ்ய யஞ்ஞங்கள்; ருதுக்களே பசுயாகங்கள் (பந்தங்கள்); வருஷமும் வருஷக் கூட்டங்களும் (இவைகளில் செய்யப்படுபவைகள்) அஹர்கணம் (என்னும் க்ருதுக்கள்); இவ்விதமாகச் சொல்லப்பட்ட எண்ணரூபமான யஞ்ஞமானது தனக்கு உள்ள ஸர்வஸொத்தையும் கொடுத்து செய்யப்பட்ட ஸத்ரம் (என்ற நெடுங்கால யஞ்ஞம்) ஆகும்; மரணமே இந்த யாகத்தில் அவபிருதஸ்நாநம் (முடிவு). கிழத்தனமடைந்து சாகும்வரை செய்யக்கூடிய அக்னி ஹோத்ரமும் ஸத்ரயாகமும் இதுவே.''

இதிலிருந்து யாகத்தில் மூட நம்பிக்கையுடன் செய்யும் ஒருவன் இவ்வாறு யாகம் செய்யும் நிலையைவிட்டு மேல் நோக்கி விருத்தியாகவேண்டும் என்பது வெளியாகும். யாகத்தைப்பற்றியும் கர்ம காண்டத்தைப்பற்றியும் உள்ள ஆக்ஷேப ஸமாதானுதிகள் பொதுக்குறிப்புக்கள் முதலியவைகளை அடுத்த ஸஞ்சிகையில் எடுத்து விவரிப்போம்.

# மகர ஸங்கராந்தி

## MAKARA SANKARANTHI

இது ஆரியர்களின் ஜோதிஷசாஸ்திரத்தின்படி மேஷம் முதலிய பன்னிரண்டு ராசிகளாகப் பிரிக்கப்பட்ட ராசிசக்ரத்தில் பத்தாவது பாகமாகிய மகரமென்கிற ராசியின் முதலாவது பாகத்துடன் ஸூரியன் சம்பந்தப்படுகிற காலம். அதாவது பூமியின் புறத்திலிருந்து பார்க்கிறவர்களுக்கு அசுவதீ முதலான 27-நக்ஷத்திரங்களாகப் பிரிக்கப்பட்ட நக்ஷத்ரசக்ரத்தில் 21-வது நக்ஷத்திரத்தின் முதல்பாகத்துடன் ஸூரியனுடைய முதல்பாகம் ஸமரேகையிலிருப்பதாகத் தோன்றக்கூடிய காலம்.

இந்த ஸங்கராந்திக்கு முந்தின நாளுக்குப் போகிப்பண்டிகை என்று பெயர். இதில் எல்லோரும் எண்ணெய் தேய்த்து ஸ்நாநம் செய்து நல்ல சாப்பாடு சாப்பிட்டு ஸுகம் அடைவார்கள். மார்கழிமாதம் நல்ல மாஸமல்லாததாலும், அதில் வியாதி முதலியன ஏராளமாக உலாவிவருவதாலும் அந்த மாஸம் முழுவதும் ஜனங்களது பொது நன்மைக்காக ஒவ்வொருநாளும் அதிகாலையில் பாடத்தெரிந்தவர்கள் பஜனை செய்துகொண்டு ஒவ்வொரு ஊரிலும் ரதவீதியைச் சுற்றிவருவது வழக்கம். இந்த மாதம் முடிவுநாளாகிய போகிபண்டிகையன்று கெட்டமாஸம் முடிந்துவிட்டது என்றே எங்கும் கொண்டாட்டம் செய்கின்றனர். போகிப்பண்டிகையன்று காலையில் வீட்டிலுள்ள பழய வஸ்துக்கள் எல்லாவற்றையும் போட்டு வாயிலில் ஓர் தீ மூட்டி எல்லோரும் குளிர் காய்வது சில ஊர்களில் வழக்கம்.

மறுநாள் அதாவது தைமாஸம் முதல்தேதியன்றுதான் ஸங்கராந்தி. அன்றைக்குள் வீடுகள் எல்லாம் வெள்ளை அடிக்கப்பெற்று வாயிலில் அழகாக செம்மண்பட்டை அமைக்கப்பட்டிருக்கும். போகியன்று கொளுத்திய பழைய வஸ்துக்களுக்குப் பதிலாக புதிய வஸ்துக்கள் வாங்கி வைத்திருக்கும். புதுப்பானைகளில் அன்று பூஜைக்கு உபயோகப்படுவதற்காகச் சர்க்கரைப்பொங்கல் முதலிய உண்டிகள் தயார் செய்யப்படும். கரும்புதான் அன்று முக்கிய நிவேதன ஸாதனம். பொதுவாக, தித்திப்பான வஸ்துக்களே அன்று முக்கிய நிவேதன ஸாதனங்களாக ஏற்பட்டவை. இந்தப் புண்யகாலத்தில் திலதேனு * வஸ்திரம் முதலியவைகளைத் தானம் செய்து, ஆலயங்களில் எண்ணெ தீபங்கள் போடுவது, திலஹோமங்கள் செய்வது முதலிய கர்மங்களைச் செய்யவேண்டும் என்று விதிக்கப்பட்டிருக்கிறது. அன்று ஸ்வாமி தர்சனம் செய்வது மிகுந்த விசேஷம். பிரயாகை க்ஷேத்திரத்தில் அன்று திரிவேணீஸ்நாநம் மஹாவிசேஷம் என்று அனுஷ்டிக்கப்பட்டு வருகிறது. முன் குறிப்பிட்ட 12-ராசிகளுள் ஒவ்வொரு ராசியிலும் ஸூர்யன் ஸம்பந்தப்படும்பொழுது எல்லாம் இங்குக் குறிப்பிக்கப்பட்ட தர்ப்பணாதி கர்மங்கள் செய்யவேண்டும் என்று விதிக்கப்பட்டிருக்கிறபோதிலும், இம்மகர ஸங்காராந்தியில் இவைகளைச் செய்தால் எவ்வளவோ மேன்மை உண்டாகும் என்று மிகச் சிறப்பாகக் கூறப்பட்டிருக்கிறது.

இந்த ஸங்கராந்தியன்று நடுப்பகலில் ஒவ்வொருவர் வீட்டு முற்றத்திலும் செம்மண்ணால் ஸூர்ய சந்திர பிம்பங்கள் எழுதி வீட்டில் பெரியவராக இருப்பவர் ஸூர்யபூஜை செய்வது வழக்கம். இதற்குத்தான் சக்கரைப்பொங்கல் முதலியன நிவேதனம் செய்யப்படும். மகரஸங்கராந்தியன்று ஸூர்யன் வடக்கே திரும்ப உத்தராயணம் தொடங்குகிறது. தக்ஷிணாயனம் முழுவதும் ஸூர்யனுக்குப்பலக்குறைவு, உத்தராயணம் பலம் அதிகம். மகர ஸங்கராந்தியன்று ஸூர்யன் பல விருத்தி தொடங்குவதால் அன்று ஸூர்யபூஜை முக்யம். ஸூர்யன் விருத்தியானல் அதனல்

* திலதேநு என்பது எள்ளாற்செய்யப்பட்ட பசுவுருவம்.

பிராணி முதலியவைகள் எல்லாவற்றிற்கும் மிகுந்த உத்ஸாஹம் தொடங்கும். இது பற்றியே வருஷத்தில் உத்தராயண காலம் மிகுந்த சிறந்த பாகம். இதுவே ஜனங்கள் சுறுசுறுப்புடன் தொழில் செய்யுங்காலம். கல்யாணாதி சுபகர்மங்கள் இதில் தான் நடக்கவேண்டும். இவ்வாறு ஸகல உத்ஸாஹத்திற்கும் ஆரம்பகாலம் இந்த ஸங்கராந்தி. ஆதலால்தான் இது மிகுந்த கோலாஹலமாக ஜனங்களால் கொண்டாடப்படுகிறது. பாலஸூர்யனுக்குச் சர்க்கரையே மிகப்ரீதியாதலின் தித்திப்பு வஸ்துக்களே இன்று நிவேதனம். முக்ய நிவேதனம் சர்க்கரைப்பொங்கலாதலால் இந்தப் பண்டிகைக்குப் பொங்கல் என்ற ஒரு பெயரும் உண்டு. இந்தக் கோலாஹல ஸமயத்தில் மாப்பிள்ளைகள் மாமனார் வீடுசென்று சீரு முதலிய மரியாதைகள் பெற்று இரண்டொருநாள் ஸுகமாக இருந்து வருவது சில ஜில்லாக்களில் வழக்கம். அநேக ராஜஸபைகளில் வித்வான்களுக்குப் பரிசுகொடுக்கும் காலமும் இதுவே.

இந்த ஸங்கராந்திகாலத்தில் காஞ்சிபுரம், திருவண்ணாமலை, ஸ்ரீரங்கம், மதுரை முதலிய திவ்ய க்ஷேத்ரங்களில் பெரிய உத்ஸவங்கள் நடப்பது வழக்கம். முன்னொரு காலத்தில் இந்த ஸங்கராந்தி புண்யகாலத்தில் மிகுந்த அற்புதமான திருவிளையாடலை மதுரை ஸுந்தரேசுவரர் செய்தருளியதாக ஓர் கதைகூட ஹாலாஸ்ய மஹாத்ம்யத்தில் காணப்படுகிறது. ஓர் ஸங்கராந்தியன்று அப்பொழுதிருந்த பாண்டியன் பகவானைக்கண்டு தரிசித்துவர, தனது கையில் கரும்பை ஏந்திக்கொண்டு மற்றைய நிவேதன வஸ்துக்கள் ஏந்தி கோலாஹலமாக வந்த தனது பரிவாரத்தால் சூழப்பெற்று புறப்பட்டான். கோயிலை வலம் வருகையில் வடக்குப் பிராகாரத்தில் வாயுமூலையில் ஓர் ஸித்தர் உட்கார்ந்திருப்பதைக் கண்டான். இவர்கள் அருகாமையில் போனபோதிலும் ஸித்தர் வழிவிடாது குறுக்கேயே உட்கார்ந்திருந்தார். அரசன் மிகக்கோபங்கொண்டு தனது ஸேவகர்களை நோக்கி ஸித்தரை ஒதுக்கி உட்கார்த்திவிட்டு வழியை விலக்கும்படி ஏவினான். ஸேவகர்களோ ஸித்தரிடம் போனவுடன் அவரை ஒன்றும் செய்யமுடியாதவராக விழித்தனர். அப்பொழுது ஆச்சரியம் மிகுந்த அரசன் ஸித்தரை நோக்கி, 'இவ்வளவு சக்தியுடைய உமக்கு இந்த விமானத்திலிருக்கும் கல்யானையை என் கையிலிருக்கும் கரும்பைத் தின்னும்படிசெய்ய முடியுமா?' என்று வினவ, கல்யானையுடனே தன்னிடத்திலிருந்தபடியே அரசன் கையிலிருந்த கரும்பைத் துதிக்கையால் வளைத்து இழுத்துத் தின்றது. உடனே தன்னிடம் கிருபைகூர்ந்து தன்னை ஆட்கொள்ள ஸித்தர் உருவாய் வந்தவர் ஸோமஸுந்தரக் கடவுளே என்ற எண்ணம் அரசனுக்கு உண்டாக அவன் ஸித்தரை அடிபணிந்து கிருதார்த்தனானான்.

ஸங்கராந்திக்கு அடுத்தநாளுக்கு மாட்டுப் பொங்கல் என்று பெயர். இன்று பிராம்மணர்கள் தவிர மற்றைய ஜாதியார்கள் மிகக் கோலாஹலமாகத் தமது ஆடு மாடுகளை அலங்கரித்து அவைகளுக்கு நல்ல உணவளித்து அவைகளை ஆதரிப்பது வழக்கம். சில கள்ளர் ஜாதிகளில் இந்தத் தினத்தில் காளைகளைத் தம்பட்டம் முதலியவைகளின் சப்தங்களால் வெறியுண்டாகும்படி செய்துவிட்டு, அவைகளின் கொம்புகளிலிருக்கும் வஸ்திரங்களைச் சிலர் எடுக்க முயலுவது வழக்கம். இதற்குத்தான் ஜெல்லிக்கட்டு என்று பெயர். சிற்சில ஸமயங்களில் அந்த வஸ்திரத்தின் ஸொந்தக்காரர் வீட்டுப்பெண்கள் கல்யாணமாகாதிருந்தால், வஸ்திரம் எடுத்துவரும் பிள்ளைகளையே கல்யாணம் செய்து கொள்வது வழக்கம். இவ்வாறு இந்த ஸங்கராந்தியில் எல்லாவித ஜாதியாரும் ஸம்பந்தப்பட்டு ஆனந்திக்கும்படியான விஷயங்கள் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன.

மாட்டுப்பொங்கலுக்கு அடுத்தநாளுக்குக் கனு என்று பெயர். இதில் ஒன்றும் தொடங்குவதில்லை. இதற்குக் கரிநாள் என்று பெயர். உலகில் ஸுகதுக்காதிகள் மாறிமாறி அடுத்து வருகின்றன என்பதற்கு இதுவே ஓர் குறிப்பாகும். இந்தத் தினத்தில் காலையில் வர்ணச் சோறுகளால் பெண்பிள்ளைகள் காக்கை முதலிய பக்ஷிகளை ஆராதித்துவிட்டு ஸ்நாநம் செய்வது வழக்கம். அன்று தக்ஷிணதேசங்களில் பெண்களை தமது கணவனிடம் அனுப்பி அவர்களுக்குச் சீர் ஒன்றும் குறையாதனுப்ப வேண்டும். இம்மி குறைந்தாலும் ஏளனத்திற்கிடமாகும்.

இம்மகர ஸங்கராந்தி காலத்தையே உத்தராயண புண்யகாலம் என்று சில ஸ்மிருதிகளில் சொல்லப்பட்டிருக்கிறது. சில ஸ்மிருதிகளில் அயனமும் ஸங்கராந்தியும் வெவ்வேறு என்று கூறப்பட்டிருக்கிறது. இவ்விஷயங்களின் உண்மையைப்பற்றிச் சற்று ஆராய்வோம்.

ஸூரியனுடையதோ அல்லது பூமியினுடையதோ கதி விசேஷத்தினால் வருஷப்பிறப்பு முதல் ஒவ்வொரு காலமும் வித்தியாசப்பட்டுக் கொண்டே வருமென்று ஜோதிஷ சாஸ்திரத்தின் மூலமாயும் வேதவாக்கியங்களின் மூலமாயும் வெளியாகிறது. சதபதப்பிராம்மணத்தில் "வஸந்தம் கிரீஷ்மம் வருஷருது இம்மூன்று ருதுக்களும் தேவர்களைச் சேர்ந்தவை. சரத், ஹேமந்தம், சிசிரம் இம்மூன்றும் பிதுருக்களைச்சேர்ந்தவை. சுக்கிலபக்ஷங்கள் தேவர்களைச்சேர்ந்தவை. கிருஷ்ணபக்ஷம் பிதுருக்களைச் சேர்ந்தவை. பகல்கள் தேவர்களைச்சேர்ந்தவை. இராத்திரிகள் பிதுருக்களைச் சேர்ந்தவை. பகலின் முன்பாதி தேவர்களையும் பின்பாதி பிதுருக்களையும் சேர்ந்தவை. சூரியன் வடக்காக (உத்தராயணத்தில்) திரும்பும்பொழுது தேவர்களைச் சேர்ந்த வஸந்தம் முதலிய மூன்று ருதுக்களில் இருந்து தேவர்களை ரக்ஷிக்கிறார். தெற்கு நோக்கிச் செல்லும்போது (தக்ஷிணயனத்தில்) சரத் முதலிய மூன்று ருதுக்களிலிருந்து பிதுருக்களைக் காக்கிறார்" என்று கூறப்பட்டிருக்கிறது. இந்த வாக்கியங்களைப் பார்க்கும்பொழுது வஸந்தருதுவில் உத்தராயணம் தொடங்குவதாகத் தெரிய வருகிறது.

தைத்திரீயப் பிராம்மணத்தில் "வஸந்தம் என்பது ருதுக்களின் முகம்" என்ற வாக்கியத்திற்குக் "காலமாதவீயம்" என்ற கிரந்தத்தில் "வருஷத்தின் துவக்கமாயிருப்பதால் வஸந்தன் முகம் என்று சொல்லப்பட்டது." என்று வியாக்கியானம் செய்யப்பட்டிருக்கிறது. இதனால் வஸந்த ருது வருஷத்தின் ஆதியென்றும் உத்தராயணத்தின் ஆதியென்றும் தெரியவருகிறது. கர்க்க ஸம்ஹிதா என்ற ஜோதிஷ கிரந்தத்தில் "சாந்திரமானத்தின்படி மகரமாஸத்தின் சுக்லபக்ஷத்தின் பிரதமை திதியில் உத்தராயணம் தொடங்குகிறது" என்று அர்த்தமுடைய சுலோகமிருக்கிறது. இதனால் மகமாஸம்முதல் வஸந்த ருது ஆரம்பமென்று தெரியவருகிறது. அப்படியே மஹாபாரதத்தில் அனுசாஸன பருவத்தில் பீஷ்மர் தர்மபுத்திரருக்குத் தன்னுடைய முடிவுகாலத்தைப்பற்றி இவ்விதம் சொல்லியிருக்கிறார். "உத்தராயணம் வந்துவிட்டது. மாகமாஸம் வந்துவிட்டது. இந்த மாகமாஸத்தின் சுக்கிலபக்ஷத்தில் மூன்றிலொருபாகம் பாக்கியிருக்கிறது இதனாலும் மாகமாஸம் தொடங்கி உத்தராயணம் என்று தெரிகிறது. இதற்கேற்ப மாகமாஸம் வரும் ரதஸப்தமி ஸூர்ய ரதம் வடக்கே திரும்பிய நாளை குறிப்பிக்கின்றது. இப்படியே வைதீகஜோதிஷமென்ற புஸ்தகத்தில் அவிட்ட நக்ஷத்திரத்தின் ஆரம்பத்தில் உத்தராயணாரம்பமும் ஆயிலியத்தின் பாதியில் தக்ஷிணாயனமும் அதாவது மாகமாஸத்தில் உத்தராயணமும் ச்ராவணமாஸத்தில் தக்ஷிணாயனமுமென்று காணப்படுகிறது. அமரகோசமென்ற புத்தகத்தில் மாகம் முதலிய இரண்டிரண்டு மாதங்கள் ஒவ்வொரு ருதுவென்றும் அப்படியே மூன்று ருதுக்கள் அயன

மென்றும் சொல்லப்படுகிறது. வராஹமிஹிரர் என்பவர் முன்னொருகாலத்தில் ஆயில்ய நக்ஷத்திரத்தின் பாதியின்மேல் தக்ஷிணாயனமும், அவிட்டம் முதல்கொண்டு உத்தராயணமும் இருந்தபடியால் முன்சாஸ்திரங்களில் அப்படி எழுதப்பட்டுள்ளது. அவர் காலத்தில் கர்க்கடக ராசி முதற்கொண்டு (ஆடிமீ) தக்ஷிணாயனமும் மகரமுதற்கொண்டு உத்தராயணமும் பிரத்தியக்ஷமாய்ப் பரீக்ஷித்துப் பார்த்ததில் தெரியவருகிறது'' என்று வரைந்திருக்கிறார்.

இதில் முன்னால் சொல்லப்பட்டிருக்கிற வாக்கியங்களைக் கவனிக்கும்பொழுது வெகுநாளடைவில் சூரியகதி பேதப்படுகிறதென்றும் அதன் மூலமாய்த் தக்ஷிணாயன உத்தராயண புண்ணிய காலங்கள் காலத்துக்குக் காலம் வித்தியாஸப்படுகிறதென்றும் தெளிவாகிறது. தற்காலத்திய பரீக்ஷையில் வராகமிஹிரர் குறிப்பிட்ட காலத்தைவிட சுமார் 20நாளைக்கு முன்பாகவே தக்ஷிணாயனமும் உத்தராயணமும் ஏற்படுகின்றன என்பது, சுத்த பஞ்சாங்கங்களால் வெளியாகிறது. அதாவது மார்கழிமீ 8-ந்தேதியில் உத்தராயணமும் ஆனிமீ 8-ந்தேதியில் தக்ஷிணாயனமும் சம்பவிக்கிறதாகத் தெரிகிறது. அதை அனுசரித்தே விஷுவமென்று சொல்லப்படும் அற்பிசி முதலிலும் சித்திரை முதலிலும் சம்பவித்திருந்த விஷுவமென்ற இரண்டு புண்ணியகாலங்களும் முறையே புரட்டாசிமீ 8-ந்தேதியிலும், பங்குனிமீ 8-ந்தேதியிலும் ஸம்பவிக்கின்றன. அப்படியே ரிக்வேதத்தின் கருத்தை வெளிப்படுத்துவதற் கேற்பட்ட யஸ்கரேன்பவரும் பாத்திரபத மாசம் தொடங்கி தக்ஷிணாயனமென்று சொல்லியிருக்கிறார். இவ்வித புண்ணிய காலங்கள் வேறுபடக்கூடியது சஹஜமே.

இம்மாதிரி மகர ஸங்கராந்தி பின்னடைவதற்குக் காரணம் என்ன என்ற சங்கை பிறக்கும். கிரேக்கர் காலத்தில் ஹிப்பார்க்கஸ் என்ற வானசாஸ்திரி ஸமராத்ரஸ்தானம் (இரவும் பகலும் ஒன்றாக இருக்கும் ஸ்தானம்) வானத்தில் மெதுவாக இடம் பெயருகிறது என்பதை க்ரேக் இலக்கியங்களிலிருந்து உணர்ந்தார். நமது பெரியோர்களும் இதை உணர்ந்திருக்கின்றனர் என்பது, முன்னர் எடுத்துக் காட்டிய உதாரணங்களிலிருந்து வெளியாகும். இந்தப் பின்னடைவு மிக மெதுவாக நடப்பதால்தான் வெகுநாள் கழிந்தபின் இந்த மாறுதல் வெளியாகின்றது. ஆங்கல நாட்டில் ஸர் ஐஸக் நீயுடன் பிரபஞ்ச ஆகர்ஷண சக்தி, அதன் ஸ்வரூபம். இவைகளைக் கண்டுபிடித்தபின்னர் இந்தப் பின்னடைவு உண்டாவதன் காரணம் நன்றாக வெளியாயிற்று.

பூமி சுற்றுவதால் அதன் மத்தியபாகம் வெளிவந்திருக்கிறது. அதனால் ஸூர்யன் ஆகர்ஷண சக்தி மற்றைய பாகத்தைவிட அதில் அதிகமாகத் தொழிற்படுவதால் பூமி சுற்றுவதை அது ஒருவாறு மாற்றிவிடுகிறது. இது மாற்றும் விதத்தை நன்கு உணர சுற்றும் பம்பரத்தை எடுத்துக்கொள்ளுவோம். பம்பரம் சரிவாகச் சுற்றினால் அது தன்னைச் சுற்றி வருவதோடுங்கூட சக்கிராகாரமாக ஓர் நேர் உச்சிக் கோட்டைச் சுற்றியும் வரும். இது நாம் எல்லோரும் அறிந்த விஷயமே. இது போல பூமியும் ராசி சக்கிரமட்டத்திற்குச் சரிவாக தன்னைத்தானே சுற்றிவருவதால் ஸூர்யன் ஆகர்ஷண சக்தியால் மாற்றப்பெற்றுப் பூமியின் இருசுக்கோடு பம்பரம் சுற்றுவதுபோல்ராசி சக்கிரத்தின் துருவத்தைச் சுற்றி ஒழுங்காக வரவேண்டும். பூமத்யரேகையின் மட்டத்திற்கும், ராசி சக்கிரமட்டத்திற்கும் இருக்கும் வித்யாஸத்தால் பூமியின் துருவம் இதற்கேற்ற சிறிய சக்கிரத்தில் ராசிசக்ரத்துருவத்தைச் சுற்றி வருகிறது. இம்மாதிரி சுற்றுவதால் பூமத்யரேகை மட்டம் நகருகிறது. அதனால் அதுவும் ராசிசக்ரமட்டமும் ஸந்திக்கும் இடம் ஆகாயத்தில் மேற்கே இருந்து கிழக்குநோக்கி

மெதுவாகப் போகிறது. இந்த ஸந்திக்கும் இடத்திற்கு ஸூர்யன் வந்தால்தான் ஸமமான இராப்பகல்கள் உண்டாகின்றன. இதனால் இந்த ஸ்தானத்திற்கு ஸமராத்ரஸ்தானம் என்று பெயர். இவை ஆகாயத்தில் இரண்டு உண்டு. இவைகளில்தான் வருஷத்திற்கு இருமுறை ஸம இராபகல்கள் உண்டாகும். இந்த விஷயம் முன் காலத்தில் சித்திரை முதல் தேதியில் உண்டாகிக்கொண்டிருக்கலாம். இப்பொழுது அது பங்குனி மாதம் 8௳யில் உண்டாகிறது. அதாவது இவைகளுள் முதல் ஸமராத்ரஸ்தானம் மேஷராசியிலிருந்தது, இப்பொழுது மீனராசிக்கு வந்துவிட்டது. இதற்கேற்ப உத்தராயணம் தொடங்கும் ஸ்தானமும் பின்னடையவேண்டும். உத்தராயணம் இப்பொழுது மார்கழிமீ 8௳ யில் தொடங்குவதால் இந்த ஸ்தானம் மகரராசியைவிட்டுத் தனுவில் போய்விட்டது. பீஷ்மர்காலத்தில் ரதஸப்தமியன்று உத்தராயணம் தொடங்கியதாகத் தெரியவருகிறதால், அவர்காலத்தில் இந்த ஸ்தானம் கும்பராசியில் இருந்தது என்று தெரியவருகிறது. முற்கூறியபடி ஸூர்ய கதியில் (பூமிகதியில்) ஸம்பந்தப்பட்ட ஸமராத்திரி ஸ்தானப் பின்னடைவே இந்த மாறுதலுக்குக் காரணம். முன் தெரிந்திருக்கும் காலங்களில் ஸமராத்திர ஸ்தானத்திற்கு ஸூர்யன் வருங்காலத்தையும், இப்பொழுது ஸூர்யன் அதே ஸ்தானத்திற்கு வருங்காலத்தையும் கொண்டு வருஷம் ஒன்றுக்கு ஸம இரவுபகல் ஏற்படுவது 50·2 விநாடி பின்னடைகிறது. இது முன் ஒருதரம் ஏற்பட்ட தினத்திற்கு மறுபடியும் வருவதற்கு 25,800-வருஷங்களாகும்.

முன்கூறியவற்றிலிருந்து பூமியின் துருவம் ராசிசக்கிர துருவத்தை 25,800 வருஷத்திற்கு ஒருதரம் சுற்றிவருகிறது என்பது வெளியாகிறது. இதனால் ஏற்படக் கூடிய மாறுதல்களைச் சற்றுவிசாரிப்போம். இப்பொழுதிருக்கும் துருவநக்ஷத்திரத்திற்கு அருகாமையிலேயே பூமியின் துருவம் வருகிறது. இன்னும் இரண்டு மூன்று நூற்றாண்டுகளுக்குப் பூமியின் துருவம் துருவநக்ஷத்திரத்தை அணுகிக்கொண்டேயிருக்கும். பின்னர் வரவர அதைவிட்டு விலகிக்கொண்டேவரும். பூமியின் துருவம் போகும் மார்க்கத்திலிருக்கும் மற்றைய நக்ஷத்திரங்கள் பின்னர் துருவ நக்ஷத்திரமாக இப்பொழுதிருக்கும் துருவ நக்ஷத்திரத்திற்குச் சலனம் ஏற்படும். இதனால் பூமிக்கு இம்மாதிரி மாறுதல்கள் ஏற்படும் என்று இப்பொழுது எவ்வாறு கூறமுடியும்?

நம்மவர்கள் சாஸ்திரீயமான புண்ணியகாலமின்னதென்று தீர்மானித்துக்கொண்டு அந்தந்தக் காலத்திற்குரிய ஸத்கர்மங்களை அனுஷ்டிக்கவேண்டிய தவசியம். அவ்வளவில்லாவிட்டாலும் கணிதசாஸ்திரப்படி நன்றாய்க் காலத்தை ஆராய்ந்து இன்றைக்குப் புண்ணிய காலம் இன்ன ஸமயத்தில் ஏற்படுமென்பதை லோகோபகாரார்த்தமாகப் பிரசுரப்படுத்துகிற சுத்த பஞ்சாங்கத்தின்படியாவது அனுஷ்டிக்க வேண்டும். அப்படிக்கில்லாவிட்டால் தாங்கள் செய்யும் ஸத்கர்மங்கள் அகாலத்தில் செய்யப்படுவதினால் உள்ளபடி பலனைத்தரா. இதை ஆஸ்தீகர்களெல்லோரும் கவனித்து, கண்ட பஞ்சாங்கங்களை நம்பாமல் சரியாய்க் கணிக்கப்பட்ட பஞ்சாங்கத்தின்படி நடப்பது நலம். ஸரியானபஞ்சாங்கம் எது என்றினியாவது நாம் ஆராயாதிருப்பின், நமது விரதமுதலியவெல்லாம் முறைபுரண்டு போகுமென்பதற்கென்ன தடை?

மஹாமஹோபாத்யாயர்
ஆர். சந்திரசேகர சாஸ்திரிகள்.

# தமிழ்வசன நூற்சரிதம்

## HISTORY OF THE TAMIL PROSE LITERATURE

---

யாம் முன்பொருமுறை விவேகபோதினியில் எழுதிய விஷயத்தில் தமிழ்வசனநடை இவ்வாறு இருத்தல் வேண்டும், அதன் இலக்கணம் இன்னது என்பதைக் குறித்து எழுதினோம். இனி, தமிழ் வசன நூல்களின் சரிதத்தை ஆதிகாலந் தொட்டு இன்றளவும் ஆராய்வோம். ஆராய்வதற்கு முன் கவனிக்கவேண்டுவது ஒன்றுண்டு. அஃது என்னவெனில், 'ஆராய்வதற்கு வேண்டிய கருவிகள் உளவா?' என்பது. தமிழ் நூல்களின் முற்காலத்திய வரலாறு இது, இடைக்காலத்து வரலாறு இது, பிற்காலத்து வரலாறு இது, எனத் தெளிவுபடக் கூறப் போதுமான கருவிகள் கிடையா. தமிழ் இலக்கண இலக்கிய நூல்களின் பரப்பைக் கடற்பரப்புக்கு இணையெனக் கூறலாம். எங்ஙனம் பரந்து விரிந்த பரவையுள் மறைந்து புதைந்து கிடக்கும் பொருள்கள் பலவுளவோ அங்ஙனமே அகன்று விரிந்த தமிழ்க்கடலுள்ளும் ஆழ்ந்து மறைந்த பொருள்கள் பலவுள.

*சீரார் தமிழ்மொழியுந் தெண்டிரையுமொக்குமென்ப*
*நேரா முவமை நிகழ்த்துவமால்-காரார்*
*கலிபயக்குஞ் செம்பொருள்கள் காமர் தமிழின்*
*கலைபயக்குஞ் செம்பொருள்கள் காண்.*

இன்னும், கடலுக்கு முந்நீர் என்றும் பெயர் வாய்ந்ததுபோலத் தமிழுக்கு முத்தமிழ் என்னும் பெயரும் வாய்ந்தது. முந்நீர்ச் சுவையைக் கண்ட முனிவரனும் அகத்தியன் முத்தமிழ்ச் சுவையையுந் துய்த்தனனன்றே.

*மல்லன் மலையன்ன மாதவத்*
*தோன்பண்டு வாரிதியின்*
*சொல்லுஞ் சுவைபோற் றமிழின்*
*சுவையையுந் துய்த்தறிந்தான்*
*எல்லை யிலாக்கடல் முந்நீ*
*ரெனும்பெயர்த் இன்றமிழும்*
*நல்லறி ஞோர்புகழ்*
*முத்தமிழ்ப் பேரா னலமுறுமே.*

இம்மட்டேயோ? கடலுக்கும் ஒரு பெருங்குறைவு உளது. தமிழுக்கும் ஒருபெருங்குறைவு உளது. கடலிலுள்ள நீர் நமது பானத்துக்குப் பலன்தராது நிற்கின்றது. தமிழும் நாம் எளிதில் கற்றறியக்கூடிய வசனநூல்கள் இன்றிக் குறைபடுகின்றது. ஆனால் கடலின் தன்மையை நம்மால் மாற்ற இயலாது. தமிழின் குறையோ நம்மால் மாற்றக் கூடியது. வசன நூல்கள் மல்கிப் பெருகினால், நந்தமிழ்க் கடல் நன்னீர் நிறைந்த கடலெனப் பொலியும். தமிழ்வசன நூற்குறையை நீக்கவேண்டியது நமது கடமையாதலின் தமிழ் வசன நூல்களின் வரலாறு இது, அவை மல்கிப் பெருகும் வழி இது, என்னும் விஷயத்தை யாம் இங்கு கவனிப்போம்.

### முதற் பகுதி

இப்பகுதியில் மூன்று விஷயங்களைப்பற்றிப் பேசுவோம். அவை என்னவெனில் (1) தமிழ் வசன நூற்குறைவு (2) வசன நூலின் இன்றியமையாமை (3) தமிழ் வசன நூல் அளவு.

1. தமிழ்வசன நூற்குறைவு—தமிழ்ச் செய்யுணூல்களின் விரிவை நோக்க நோக்கத் தமிழ் வசன நூல்களின் குறைவு மிகத் தெளிவாகப் புலப்படுகின்றது. டாக்டர் மில்லர் துரையவர்கள் 'இந்தியாவுக்கு என்ன குறை இருக்குமாயினும் ஒரு குறை மாத்திரம் என்றுங்கிடையாது. அதாவது செய்யுணூல்களின் குறை என்பதே கிடையாது' எனக் கூறியிருக்கின்றனர். அவர் சொல்லின் உண்மை தமிழ் மொழிக்கே நன்கு பொருந்தும். இலக்கண நூல்கள், நிகண்டுகள், சரித்திரங்கள், முகவுரைகள், சாசனங்கள், வைத்திய நூல்கள், சோதிட நூல்கள், கணித நூல்கள், தர்க்க நூல்கள் முதலிய எல்லா நூல்களும் செய்யுள் நடையிலேயே எழுதப்பட்டுள்ளன. பின்னர் எங்குத்தான் நம்முன்னோர்கள் வசன நடையை உபயோகித்தனர் என வினவில், பழைய காப்பியங்க

ளுக்கு உரை எழுதுமிடத்து மாத்திரம் வேறு வகை தோன்றுது, வசன நடையை உபயோகித்ததாகக் காணவருகின்றது. இவ்விஷயத்தினின்றும் நமது தமிழ்ப் பாஷையிலுங்கூட, மற்று எல்லாப் பாஷைகளிலும் போல ஆதிகாலத்திற் செய்யுணடையே மிகுதிபட்டும் வசன நடையே குறைவுபட்டும் நூல்களில் ஆளப்பட்டன என்னும் விஷயம் தெரியவருகிறது. எமர்ஸன் எனனும் ஆங்கிலவித்துவான் 'எவ்வாறு எல்லா உணர்ச்சிக்கும் முந்தியதாக இசையினும் பாட்டினுமே குழந்தைகளுக்கு இன்பம் பிறக்கின்றதோ, அவ்வாறே ஒரு பாஷையின் வரலாற்றை நோக்கும்போதும் ஆதியில் இசையும் பாட்டுமே மிக்குப் பயின்றுளதாகத் தெரியவரும்' எனக் கூறுகின்றார். ஹோர்ட்ஹோப் என்ற மற்றொரு ஆங்கில வித்துவான் 'வசன நடையில் விஷயங்கள் எழுதப்பட்டால் அவைகளை ஞாபகத்தில் வைத்துக்கொள்வது கஷ்டமாதலாலும், செய்யுள் ரூபமாக இருந்தால் விஷயங்களை நினைவில் நிறுத்துதல் எளிதாதலாலும் எல்லாப் பாஷைகளிலும் செய்யுணடையே ஆதிகாலத்தில் ஆளப்பட்டது' என எழுதியுளளார். இவர்கள் கூறியது நமது தமிழ்மொழிக்கும் நன்கு பொருந்தும். தமிழ்ச் செய்யுணூல்கள் கிறிஸ்து பிறப்பதற்கு முன்னரே இருந்தும் வசனநூல்களோ வீரமாமுநிவர் (Constantius Beschi) காலம் முதற்கொண்டுதான் பெரிதுங் காணப்படுகின்றன.

காகிதம், அச்சயந்திரம் இவை இல்லாமையும் ஆதியில் வசனநூல்க ளெழுதப்படாமைக்குக் காரணமாகும். அளவின்றி ஓடும் வசனத்தாலமைந்த நூல்களைப் பனையோலையில் எழுதுவது எளியதோர் வேலையல்ல. ஆதலின் அன்றே கதைகள்கூடப் பாட்டு ரூபமாகவே நம் முன்னோர்களால் அமைக்கப்பட்டன. அளவின்றி ஓடும் வசனவாக்கியங்களை அளவுபடக் குறுக்கும் வழியாதெனத் தேடினர். செய்யுளே தக்கதென்று நாடினர். அங்ஙனமே செய்யுணூல் பல பாடினர். இக்காரணத்தாற்றான் செய்யுணூல்களுக்கு உரையெழுதுமிடத்தும் உரையாசிரியர்கள் சொல்ல வேண்டுவனவற்றை வெகு சுருக்கமாகவே சொல்லியுள்ளார்கள். சிலப்பதிகாரம் என்னும் பெருங்காப்பியத்துக்கு உரையெழுதின அடியார்க்கு நல்லார் அந்நூலின் பதிகத்தின் முதல் இரண்டு அடிகளுக்கு வெகு விரிவாகப் பொருளெழுதி "இனிப் பதிகச் செய்யுளுள், முதலீரடியும் போல யாண்டும் விரியாதது உரைபெருகும் என்பதனைக் கருதியெனக் கொள்க" என விரிந்து உரை எழுதாது விடுத்தனர். இப்போது நமக்கு இருக்கும் அச்சுயந்திரம், எழுது கருவி, காகிதம் முதலிய ஸௌகரியங்கள் நம் முன்னோருக்கும் இருந்திருந்தால், அவர்கள் பல வசன நூல்களை எழுதியிருப்பார்கள் என்பதற்குத் தடையே இல்லை.

2. வசனநூலின் இன்றியமையாமை.—இனி வசன நூலின் இன்றியமையாமையைக் கவனிப்போம். எளிதில் நமது கருத்தைப் பிறருக்கு வெளியிடுவதற்கும், பிறர் கருத்தை நாம் எளிதில் அறிதற்கும் வசன நடையே செய்யுணடையைக் காட்டிலும் பாராட்டத் தக்கது. தமிழ் வல்லுநர் பலர் தமது அருமையான காலத்தைக் கஷ்டமான பலவித செய்யுணூல்களியற்றுவதிற் செலவிட்டனர். அங்ஙனம் வெகு கஷ்டப்பட்டு இயற்றவேண்டிய செய்யுள் வகைகள் பலவுள. உதாரணமாக —நிரோட்டக யமக அந்தாதி என்பது ஒரு வித நூல்வகை. இவ்வந்தாதி இயற்றவேண்டினால் நுட்பமான பல விதிகளைக் கவனிக்க வேண்டும். யமக அந்தாதிக்கு வேண்டிய லக்ஷணங்களிருப்பதுடன் அந்தாதியைப் படிப்பவர்களுடைய மேல் உதடும் கீழ் உதடும் ஒன்றோடொன்று ஒட்டவே கூடாது. எங்கேனும் ஒட்டுமேல் அச்செய்யுள் பிழைப்படும். அதாவது ப, ம, வ, உ, ஒ என்னும எழுத்துக்கள் எங்கும் வரக்கூடாது. சிறந்த கவிவல்லவர்

களே இந்நூல் செய்ய முயலுதல் உசிதம். புலவர் பெருமானாகிய சிவப்பிரகாச சுவாமிகள் 'திருச்செந்தில் நிரோட்டக யமகவந்தாதி' என்னும் நூல் ஒன்று இயற்றியுள்ளார். அந்நூலினின்றும் இங்கு ஒரு பாட்டு எடுத்துக் காட்டுவோம்:—

கணக்காக நாய்கடின்
. காயநிலை யெனக்கண்ணி யென்ன
கணக்காக நானலைந் தெய்த்தே
னெழிற் செந்திற் கந்த ! நெற்றிக்
கணக்காக னார்தந்த நின்றனை
யேயினிக் காதலினாற்
கணக்காக னநிகர்த் தேயழி
யங்கத்தின் காதலற்றே.

இச்செய்யுளின் பொருள் வருமாறு:—

எழிற் செந்திற் கந்த! கணக்காகம், நாய்கள் தின் காயம் நிலையெனக் கண்ணி, என்ன கணக்காக நான் அலைந்து எய்த்தேன். கனா நிகர்த்தே அழி அங்கதநின் காதலற்று, நெற்றிக்கண் அக்கு ஆகனார் தந்த நின்றனையே இனிக் காதலினாற் கண்ணக்கா. (கருதுமாறு காத்தருள்).

இன்றும் தமிழ்க் கவிகள் பலர் இவ்வாறு 'மிறைக்கவி' பாடுவதில் தத்தம் வாழ்நாளைப் போக்குகின்றனர். அந்தப்பொழுதை வசன நூல்க ளியற்றுவதிற் செலவிட்டால் அவர் முயற்சி எவ்வளவோ பலனைத் தமிழ் மக்களாயினார்க்குத் தரும். அதுகொண்டு நந் தமிழ்நூற்பரப்பைக் கடைகளில் மட்கலன் இல்லாது பொற்கலனே நிரம்பியுள்ள ஒரு நகரத்துக்கு ஒப்பிடலாம். பொருட்செல்வம் உள்ளவர்கள் தாமே பொற்கலன் வாங்கி உபயோகிக்கக்கூடும்? அவ்வண்ணமே கல்விச் செல்வம் உள்ளவர்தாமே செய்யுணூல்களைப் படித்து அங்குள்ள பொருளை அநுபவிக்கக்கூடும்? பொற்கலன் வாங்கும் ஆற்றல் இல்லாதவர்கள் அந்நகரத்தை விட்டு மட்கலன் கிடைக்கும் நகரத்தை நாடுவார்கள். அதுபோலவே தமிழ்ச் செய்யுணூல்களைப் படித்தறிந்து பொருள்கொள்ளமாட்டாதவர் ஆங்கிலம் முதலிய வேறு பாஷைகளில் உள்ள வசன நூல்களைப் பாராட்டிப் படிக்கின்றனர்.

3. தமிழ் வசனநூல் அளவு.—இது எவ்வளவென்பதை ஆராய்வாம்.

வசன நடை என்பதன் பொருளென்ன? வசன நடையாவது மக்கள் பேசுவதுபோலவே அமைக்கப்படும் வாக்கியங்களால் ஆயது. இப்பொருளைக்கொண்டு ஆராயப்புகுந்தால் பழய நூல்களிலுள்ள நடையுள் வசன நடையைக் காண்பது அரிதாகும். வசன நடை என்பதற்குச் சுத்த தமிழ்ப் பெயர் உரை நடை என்பது. சிலப்பதிகாரத்துக்குப் பொருள் எழுதப்பட்ட உரைநடை செய்யுள்போலப்பிரிந்து 'ஆசிரியப்பா என்னும் பாவினத்தின் தன்மையொடு பெரும்பாலும் விளங்குகின்றது. கோல்ரிட்ஜ் என்னும் ஆங்கில வித்துவான் 'வசன நடை சொற்களின் முதற்றரக் கோவையாலாயது செய்யுணடை முதற்றரச் சொற்களின் முதற்றரக் கோவையாலாயது'என விளக்கி உள்ளார். இப்பொருளின் வழியே நோக்குமிடத்து செய்யுணடைபோல் இருக்கும் உரைநடையையும் வசனநடை எனக் கூறலாம். செம்பாகமான கவிகளுள் முதற்றரக்கோவையாவது மோனை, எதுகை முதலிய யாப்பிலக்கணம் நிரம்பியிருப்பதோடு, முதற்றரச் சொற்களும் அமைந்திருக்கவேண்டும். யாப்பிலக்கணம் 'முதற்றரக் கோவையை உண்டுபண்ணும் வழி இதுவெனத் தெரிவிக்கின்றது. இனி, முதற்றரச்சொற்கள் இவை என அறிந்து இடமறிந்து அவைகளைப் பிரயோகம் செய்பவனே நல்ல கவிஞன். செய்யுணூல்களின் ஏற்றத்தாழ்வை 'முதற்றரச் சொற்கள்' அமைந்துள்ள நிலையைக்கண்டு எளிதில் உணரலாகும். முதற்றரச் சொற்கள் முதற்றரக் கோவையாயிருப்பதினாலன்றோ கச்சியப்ப சிவாசாரியர் அருளிய கந்தபுராணம், பரஞ்சோதி முனிவர் அருளிய திருவிளையாடல் முதலிய நூல்கள்

பெரிதும் வித்துவான்களாற் பாராட்டப்படுகின்றன. பழைய உரை நடையெல்லாம் சொற்களின் முதற்றாக் கோவையாலாயது. ஆதலின் செய்யுள்போல அமைந்துள்ள உரை நடையையும் நாம் உரைநடை என்றே கொள்வோம். அங்ஙனம் செய்யுள்போலிருக்கும் உரைநடையை பழைய ஆசிரியர்களின் உரையிற் காணலாகும். உதாரணம்: —

(1) அகப்பொருளுரையாசிரியர் :—

கருங்கு ழற்கற் றைமருங் கிருத்தி
அளகமு நுதலுந் தகைபெற நீவி
ஆகமுந் தோளும் அணிபெறத் தைவந்து
குளிர்ப்பக் கூறித் தளிர்ப்ப முயங்கி etc.

(2) நச்சினார்க்கினியர் :—

பறந்து செல்லுஞ் செலவிலே தருக்கின
பாத்தலை யுடைய போரிலே திரிவன.

(3) பரிமேலழகர் :—

கூடாநட்பு. அஃதாவது, பகைமையானகத்தாற் கூடாதிருந்தே, தமக்கு வாய்க்குமிடம்பெறுந் துணையும் புறத்தாற் கூடி ஒழுகுவார் நட்பு.

(4) அடியார்க்கு நல்லார் :—

மஹாமஹோபாத்தியாயர் ஸ்ரீ சாமிநாத அய்யர் பின் வருமாறு இவர் நடையைப் பற்றி எழுதியுள்ளார் :—' இவருடைய உரை நடை சிற்சில இடத்து எதுகை, மோனை முதலியவற்றோடு கூடி இனிய சுவை பயந்து செய்யுணடையாக அமைந்துள்ளது,

இங்ஙனம் செய்யுணடைபோலத் தமிழில் உரை நடை அமைவது படிப்பதற்கு இன்பத்தைத் தருகின்றது. ஆனால் ஆங்கில வித்துவான்களுக்கு வசனநடை செய்யுள்போல அமையுமாயின் அது லக்ஷணமாய் இராதென்பது கொள்கை. சேம்பர்ஸ் என்சைக்லோபீடியா என்னும் புத்தகத்தில் பின்வருமாறு சொல்லப்பட்டிருக்கிறது :—

"வசனநடை செவிக்கு இன்பமா யிருக்க வேண்டின் அதில் எதுகை முதலிய செய்யுளுறுப்புக்கள் விரவுதல் அழகன்று. அங்ஙனம் எதுகை, மோனை தவறி வருமாயினும் அங்ஙனம் அவை வருதல் வசனநடையைப் பெரிதும் இழிவுபடுத்தும்."

இப்போது 'வசனநடை' என்பதை முற்காலத்தில் 'உரை நடை' என்றும் 'உரைச் செய்யுள்' என்றும் சொல்லிவந்தார்கள். உரை நடையைப் பற்றித் தொல்காப்பியத்தில் 'செய்யுளியல்' என்னும் பிரிவில் ஆசிரியர் தொல்காப்பியர் எழுதியுள்ளார். செய்யுளியலில் வசன நடையின் இலக்கணத்தை ஏன் சொன்னார்? என்பதை யோசித்தபோது செய்யுள் என்னும் பதத்தைத் தொல்காப்பியர் காலத்தில் என்ன பொருளில் உபயோகித்தனர் என்பதைக் கவனிக்கவேண்டியதாயிற்று.

"செய்யுள்" என்னுஞ் சொல்லின் வரலாறு:—

"செய்யுள்" என்னுஞ் சொல் "செய்" என்னும் பகுதியடியாகப் பிறந்தது. ஆதலின் "செயப்படுவன எல்லாம் செய்யுளாம்." ஆதலின் நூல்கள் யாவும் செய்யுள்களே. பாட்டுக்களாலாய நூல் ஒருவகைச் செய்யுள்; உரை (அஃதாவது) வசனத்தால் ஆயநூல் ஒருவகைச் செய்யுள் ; உரையும் பாட்டுங் கலந்து வருவதால் ஆய நூல் ஒருவகைச்செய்யுள். ஆக செய்யுள் ஆதிகாலத்தில் மூன்று வகைகளாகப் பிரிந்திருந்தது. அவை (1) "பாட்டுடைச் செய்யுள்" (Poetry), (2) "உரைச்செய்யுள்" (Prose) (3) "உரை யிடையிட்ட பாட்டுடைச் செய்யுள்" (Poetical composition in which prose is intermixed). இனிச் சூத்திரச் செய்யுள் என்னும் சொற்றொடரும் பிரயோகத்தில் உளது.

தொல்காப்பியம் செய்யுளியல் உரையில் "பாய்த்துள், விக்துள் என்றாற்போலச் செய்யுள் என்பதூஉம் தொழிற் பெயர்" என வருவதாலும், இலக்கணக்கொத்துரையில் "உரை செய்யுளாமேயெனின், செய்யுளென்னுஞ் சொற்குப் பொருளோர்ந்தும் உணர்க" என வருவதாலும் செய்யுள் என்னுஞ் சொல் செய்யப்படுவனயாவோ அவை தமைக் குறித்து

கின்றது. எனவே, பாட்டும் செய்யுள்தான், வசனமும் செய்யுள்தான், சூத்திரமுஞ் செய்யுள்தான். "சிலப்பதிகாரமென்னும் பெயரால் நாட்டுதும் யாமோர் பாட்டுடைச் செய்யுள்" என்ற இடத்துச் சிலப்பதிகார அரும்பதவுரையாசிரியர் பாட்டுடைச்செய்யுள் என்பது 'உருவாகிய பாட்டுக்களையுடைய காவியம்' என்றார். இதனாலன்றோ தொல்காப்பியர் செய்யுளியலில் வசனத்தையுங் கூறினர். செய்யுளை இரண்டு பெரும் பிரிவுகளாகப் பிரித்தார். ஒன்று 'அடிவரை யறையுடையன.' அதாவது பாட்டு, இரண்டு 'அடிவரை யறை இன்றி வருவன. அதாவது உரை, முதலிய சூத்திரங்கள் அடிவரையறையின்றி வருவன ஆதலின் செய்யுளியலில் உரையாசிரியர் 'சூத்திரம் பாட்டெனப் படாவோவெனின் படா' என்றார். தொல்காப்பியஞ் செய்யுளியலில் "உரைநடை" என்பது கீழ்க்காட்டியுள்ள பகுதியைச் சார்ந்ததாக எழுதப்பட்டுளது.

<u>செய்யுள்</u>

I அடிவரையறை யுடையன (பாட்டு)

1. வெண்பா
2. ஆசிரியப்பா
3. கலிப்பா
4. வஞ்சிப்பா
5. மருட்பா.

II அடிவரையறை யின்றி வருவன (பாட்டல்லாதன)

1. நூல்
   - (1) சூத்திரம்
   - (2) ஒத்து
   - (3) படலம்.
2. உரை
   - (1) பாட்டிடை வைத்த குறிப்பு
   - (2) பாவின் றெழுந்த கிளவி
   - (3) பொருளொடு புணராப் பொய்ம்மொழி
   - (4) பொருளொடு புணர்ந்த நகைமொழி
   - (5) சூத்திரத்து விசேட உரை.
3. பிசி
4. முதுமொழி
5. மந்திரம்
6. கூற்றிடை வைத்த குறிப்பு.

இங்ஙனம் விரிந்த பொருள்கொண்டிருந்த 'செய்யுள்' என்னும் சொல்லுக்கு வர வரப் பொருள் குன்றினது. செய்யப்படுவன எல்லாம் செய்யுளாமாயினும் செய்தல் என்னும் தொழிலின் கஷ்டம் 'பாட்டுடைச் செய்யுள்' அமைக்கும்போது தானே நன்கு புலப்படுமாதலின் செய்யுள் என்னும் பெயர் பாட்டுக்கு மாத்திரம் முக்கியமாய் உபயோகிக்கப்பட்டது. இங்ஙனம் சொற்கள் தத்தம் பொருள் குறுகிவரு நியமத்தைப் "பொதுப் படை நியமம்" என்பர் 'தமிழ் மொழியின் வரலாறு' என்னும் சிறந்த நூலை இத்தமிழுலகுக்கு அளித்த பண்டிதர் சூரியநாராயண சாஸ்திரியார் பீ. ஏ.

வீரசோழிய உரையாசிரியர் செய்யுள் என்னும் சொல்லை முதலில் அதன் விரிந்த பொருளிலும், இரண்டாவது அதன்குறுகின 'பாட்டு' என்னும் பொருளிலும் பின் வரும் செய்யுளில் உபயோகப்படுத்தி உள்ளார்;

"பத்தியங் கத்திய மென்றிரண்
டாஞ்செய்யுள் பத்தியமே
லெத்திய பாதங்க ளால்வந்
தியலு மெனமொழிந்த
கத்தியங் கட்டுரை செய்யுளின்
போலி கலந்தவற்றோ
டொத்தியல் கின்றமை யாலொன்
றாமு முரைத்தனரே."

இனி 'இலக்கணவிளக்கம்' என்னும் நூல் செய்த வைத்தியநாத தேசிகர் உரைநடையைப் பற்றித் தாம்செய்த செய்யுளியலில் தொல்காப்

பியர் கூறினதுபோலவே கூறியிருக்கின்றார். ஆனால் பாட்டியல் எழுதிய அவர்மகன் தியாகராஜ தேசிகர் 'உரைச்செய்யுள்' என்னும் சப்தத்தைக்கண்டு மயங்கி, உரைச்செய்யுளைப்பற்றிப் பாட்டியலில் தவறிச் சூத்திரம் சொல்லியுள்ளார். எனவே இலக்கணவிளக்க நூலின் பாட்டியற் சூத்திரம் 143-ஆவதான "பாட்டிடைவைத்த குறிப்பினானும்" என்பது அவ்வியலுக்கு முந்திய செய்யுளியலில் இருந்திருத்தல் வேண்டும். இலக்கணக்கொத்து எழுதின ஈசானதேசிகர் செய்யுள் என்பதன் விரிந்த பொருள் கொண்டாலுஞ் சரி, குறுகின பொருள் கொண்டாலுஞ் சரி உரைச்செய்யுள் என்பதை வசனம் என்னும் பொருள்பட உரைப்பதிற் பிழையில்லை என்றார். "இலக்கண மிலக்கிய முறையெனப் பெயர்பட்டிருக்கு மென்றெண்ணுக செய்யுளி னியல்பே" என்னுஞ் சூத்திரத்தின் கீழ்ப் பின்வருமாறு எழுதுகிறார்:—"இலக்கணமும் உரையுஞ் செய்யுளாமோவெனின் 'சூத்திரங்குறித்த யாப்பிற்றாகும், பல்வகைத் தாதுவின்' நூற்பாவகவல்' எனப்பலரு மோதலானும், "சூத்திரமுஞ் செய்யுளாதலின்" என நச்சினார்க்கினியா ரெழுதலானும் "விதித்தன செய்தலும் விலக்கியன ஒழிதலும்" 'பொருப்பு வில்லிபால் விருப்பமிலரே' என வாசகங்களைச் செய்யுளுருப்புத் தோன்ற எழுதலானும், 'உண்டான் தின்றான் ஓடினான் பாடினான்' என வுதாரணங்களை அவ்வுருப்புத் தோன்ற எழுதலானும், இலக்கணச் செய்யுள், இலக்கியச் செய்யுள், உரைச் செய்யுள், உரைச் சூத்திரம் எனப் பலரும் ஆளுதலானும், வடநூலாரும் இவ்வாறு கொள்ளுதலானும், இன்னும் பலவாற்றானு மாமென்க. செய்யுளென்னுஞ் சொற்குப் பொருளோர்ந்து முணர்க."

'உரைச் செய்யுள்' என்னும் சப்தத்தை நோக்கியே தொன்னூல் விளக்கம் எழுதிய பெஸ்கி (வீரமாமுனிவர்) 'கொன்றைவேந்தன் முதலிய கத்திய மெனக்கண்டுணர்க' என்றார்.

'தமிழ்மொழியின் வரலாறு' எழுதிய சூரியநாராயண சாஸ்திரியார் 'இவ்வாறு வசன நடையும் ஒருவகைச் செய்யுணடையாகப் பாவிக்கப்பட்டு வந்தால் அதற்குரிய தனித்தியங்கும் நிலைமையும் அற்றுக் கட்டுப்பாடுடையதாகின்றது. இது மிகவும் பரிதபிக்கத் தக்கதோர் விஷயம்' என வருந்துகின்றனர். ஆனால் நமது ஆராய்ச்சியால் 'செய்யுள்' என்னுஞ்சொல் பொருளிற்குறுகினதால் வந்தன இம்மயக்கங்களெல்லாம் என்பதை அறிந்தோம். இப்போது செய்யுள் என்னும் சொல்லுக்குப் பாட்டு என்னும் பொருளே பொருளாதலின், "உரைச் செய்யுள்" என்பது வழக்கற்ற சொல்லாயிற்று. இனி அடுத்த பிரிவில் ஆதிகாலந்தொட்டு இன்றளவும் எழுதப்பட்டுள்ள முக்கியமான வசன நூல்கள் இவை, வசன நூல் எழுதின ஆசிரியர் இவர்,இவர் என்னும் விஷயத்தை எழுதுவோம்.

வ. சு. செங்கல்வராயன். எம்.,ஏ.

உண்மையான பக்தியின் சிறப்பு.—இன்னது என்பதே நமக்குத் தெரியாது. நாம் இப்பொழுதிருக்கும் ஸாதாரண நிலையிலிருந்து நோக்கினால், பக்தியின் வீர்யம், செழிப்பு, அபாரசக்தி ஆகிய இவைகள் நமக்கு நன்றாய விளங்கமாட்டா. பக்திமலையைத் தூக்குவது, அலக்ஷ்யமாய்ப் பெரிய ஸமுத்திரங்களைத்தாண்டுவது, பஞ்சபூதங்களை அழிப்பது, பிரபஞ்சத்தையே அசைப்பது ஆகிய அற்புதச் செயல்களுக்குக் காரணமாக இருக்கும். பக்தியாலாகாத தொன்றில்லை. பக்தியால் ஒருவன் தொழில் செயயும் காலத்தில் அவன் ஆத்மசக்தியே வெளிவருவதால் நடக்கும் தொழில் அற்புதமாக இருக்கும். சுத்தஹிருதயம் உடைய மஹான்களிடத்தில் இந்தப்பக்தியின் சக்தியை நன்றாகக் காணலாம். வருவனகூறல், அற்புத மருந்துகள், தம்மை அறியாமல் வெளிவரும் உண்மை வாக்கியங்கள், மெய்ம்மறந்து கூறல், இவைப்போன்ற அற்புத சக்திகள் சுத்தாத்மாக்களுக்கு எதிர்ச்சையாய் உண்டாவது. இப்பெரியோர்கள் உலகத்தில் வாழ்வதே அற்புதம். மற்றைய ஜீவராசிகள் எவ்வாறு நாளைக்கு என்ற எண்ணமின்றி வாழ்கின்றனவோ, அவ்வாறே இவர்களும் மறைவாக இருக்கும்படியான ஓர் சக்தியின் வைபவத்தாய் காப்பாற்றப்பட்டு வாழ்கின்றனர் என்பது இவர்களது நடத்தையை உற்று நோக்குவோருக்கு விளங்கும்.

## ஸ்ரீ ரமேச சந்த்ர தத்தர்

### R. C. DUTT B.A., LL.B., C.I.E.
### (A LIFE SKETCH)



வங்கமாதாவின் வரபுத்திரரும் மாத்ருபூமியின் திருத்தொண்டில் அமர்ந்தவரும் தாய்மொழியை வளர்ப்பதில் தன்னயம் பாராட்டாத ச்ரத்தைகொண்டவருமான ஸ்ரீ ரமேச சந்த்ர தத்தர் சென்ற நவம்பர்மீ 31வ செவ்வாய்க்கிழமையன்று லோகாந்தரமடைந்த துக்கச் செய்தியைக்கேட்டுப் பாரதநாடு முழுவதும் விசனமுறும். வங்காள நாட்டின் அரங்கத்தில் வங்காளியரின் நூதன வாழ்க்கை நாடகத்தை ஸூத்ரதாரராய் நின்று ப்ரஸ்தாவனை செய்தவர்களெல்லோரும் ஒருவர் பின்னொருவராய்த் திரைக்குள் மறைவாராயினர். "பழையன கழிதலும் புதியன புகுதலும்" எல்லா விஷயங்களிலும் சகஜமாய்க் கொண்டுவருகிறது. ஆயினும் புதியன புகுந்த மாத்ரத்திலேயே புராதனத்தின் இன்மை பூர்ணமாய் விடுகிறதில்லை. வங்காளநாட்டில் காலதர்மமடைந்துவிட்டவர்களைப் போன்றவர்கள் இன்னும் தோன்றவில்லை. இந்தத் தரித்ரதேசத்தின் ரத்நங்களை ஒவ்வொன்றாய்க் காலஸாகரத்தில் முழுகிப்போகப் பறிகொடுத்துவிட்டு நமது திருத்தாயானவள் கண்ணீர் உகுத்துக்கொண்டு எவர்களின் முகத்தைப்பார்த்து ஆசையோடு மார்பில் கைவைத்து ஒளிபொருந்திய வருங்கால நிகழ்ச்சியை எதிர்பார்த்துக்கொண்டிருக்கிறாளோ அவர்கள் அஸ்தமித்துப்போன மஹா புருஷர்களின் திருவடிப்பொடியால் புனிதமான நெறியைப் பின்பற்றும் சக்தியுள்ளவர்களாயிருப்பார்களா ?

ஸ்வதேச நிஷ்டரும் ஸ்வதேச வாஸிகளினிடத்திற் ப்ரியங்கொண்டவருமான ரமேச சந்திரரே! தேர்ச்சிபெற்ற ராஜாங்க உத்யோகஸ்தராகிய ரமேச சந்த்ரரே! தீர்க்காலோசனையும் ஆழ்ந்த அறிவுமுடைய ராஜநீதி நிபுணரான ரமேச சந்த்ரரே! காங்கிரஸ் வேள்வியை அத்வர்யுவாயிருந்து நடத்தியவர்களில் ஒருவரும் நாவன்மைகொண்ட நவநவமான உபன்யாஸங்கள் புரிவதில் சதுரருமான ரமேச சந்த்ரரே ! எளிய நிலைமையிலிருக்கும் வங்கஸாஹித்ய இலக்கியத்தைப் பக்தியுடன் உபாஸிப்பவரும், நவீனகதாசிரியரும், ரிக்வேதத்தை வங்காளிபாஷையில் மொழிபெயர்த்தவருமான ரமேசசந்த்ரரே! ஆங்கில இலக்கியத்தில் கரைகண்டவரும் பற்பல ஆங்கில நூல்களை ஆக்கியோனுமான ரமேச சந்த்ரரே! அரசிறை, சட்ட நிரூபணம் இவைகளின் நுணுக்கமறிந்தவரும், தர்க்க நூல் வல்லவரும் கர்ஸன் பெருமானுடன் வாதம் புரிந்து வெற்றிகொண்டவருமான ரமேசசந்த்ரரே! மன்னருக்கும் மன்னுயிருக்கும் ஒருங்கே நண்பரும்விசேஷ புலமையுடன் கூடிய சட்ட நிரூபணகாரருமான ரமேசசந்த்ரரே! காயக்வாட் மஹாராஜாவின் அமைச்சரும் படோதா (இவ்வார்த்தை மஹாராஷ்ட்ர மொழி தெரியாதவர் 'பரோடா' என்று ஆங்கிலத்தில் சிதைந்து வந்திருப்பதைப்பார்த்து தமிழிலும் வழங்கு

வர். அது பிழை.) ராஜ்யத்தின் திவானுமாகிய ரமேச சந்த்ரரே! பாரதநாட்டில் நடைபெறும் தேச நன்மைக்குற்ற சகல நற்கருமங்களுக்கும் அநுகூலமாயிருந்து உதவிபுரிந்த சுத்த கர்ம வீரரே! பாரத நாட்டின் ஹிதத்தையே ஸதா விரும்பினவராய் உம்முடைய வாழ்க்கையைக் கழித்துக் கடைசியில் உமது கர்ம க்ஷேத்ரத்திலேயே உமது வாழ்க்கைச் சுமையை இறக்கி நித்ய சாந்தியை அடைந்தீர். கல்விப்புலமையிலும் சரி, கல்வி புகட்டுவதிலும் சரி, ராஜநீதியிலும் சரி, சட்டநிரூபணத்திலும் சரி, மதியூகமான மநோதர்ம ஸாம்ராஜ்யத்தின் எந்தப் பகுதியில் உமது திறமையின் அடையாளம் அழுந்தியிருக்கவில்லை? உம்மையிழந்ததனால் இன்று வங்கநாடு வறுமையுற்றதாயிற்று. பாரத நாடானது மதியூகமுள்ள மேதாவியை இழந்துவிட்டுத் தன் கண்ணீரால் இன்று உமது திருவுள்ளத்துக்குப் பூசனை புரிகின்றது. பங்காளத்துக்கு-பாரதநாட்டுக்கு-உள்ள இந்தச் சோகமானது சீக்ரத்தில் மறக்கற்பாலதோ? உம்மை இழந்த குறையை வெகு தூரத்திலுள்ள பவிஷ்யத் (எதிர்) காலமும் துர்பாக்கியான பாரதநாடும் நிறைவெய்துவிக்கும் ஆற்றலுடையதாமோ?

ரமேச சந்த்ரரே, போய்வாரும்! நாங்கள் உமக்குப் பரிவுடன் வழியனுப்புகிறோம். உம்முடைய வினையின் பயனாக எந்த உலகத்தை ஈட்டினீரோ அவ்வுலகத்தில் அக்ஷய சாந்தியை அனுபவியும். வங்காளத்திலே-பாரதநாட்டிலே-உமது பெருமை பொருந்திய வாழ்க்கையின் நினைவு வெகுகாலம் மங்காமலிருக்கும். வங்காளிகளின்-பாரதர்களின்-பின் ஸந்ததியார் உம்முடைய படிப்பினையால் தன்யர்களாகவும் உம்முடைய ஆதர்சத்தால் உயிர்க்கிளர்ச்சியுற்றவராகவும் ஆவார்களாக! உம்முடைய கர்ம வாழ்க்கையின் ஜாஜ்வல்யமான ஞாபகமானது த்ருவ நக்ஷத்ரம் போல் பாரத வாஸிகளின் வாழ்க்கைப் பாதையில் வழிகாட்டியாய் ஒளிர்ந்து கொண்டிருப்பதாக!

## I. வாலிபப்பருவம்

கி. பி. 1848-ம் ௵ ஆகஸ்ட் ௴ 13௳யில் கல்கத்தா நகரத்திலே ரம்பாகான் என்னும், பேட்டையிலுள்ள காயஸ்த ஜாதியைச் சேர்ந்த தத்த குடும்பத்திலே ரமேசசந்த்ரர் பிறந்தார். பதினெட்டாம் நூற்றாண்டின் இடைக்காலத்தில் ரமேச சந்த்ரரின் பிதாமஹரான நீலமணி தத்தர் கல்கத்தாவின் காயஸ்தர் மரபுக்குத் தலைவராயிருந்தார். ரமேச சந்த்ரரின் சிறியபாட்டனார் ரஸமய தத்தரென்பார் கல்கத்தா ஸம்ஸ்க்ருதகாலேஜின் 'ப்ரின்ஸிப'லாயிருந்தார். ரஸமயபாபுக்குமுன் வேறெந்த பாரதவாஸியும் இந்த உயர்பதவியில் உத்யோகம் பெறவில்லை. ரஸமயபாபு அதன்பிறகு கல்கத்தா சின்ன கோர்ட்டில் ஜட்ஜானார். ரமேசசந்த்ரரின் பிதாவாகிய ஈசான சந்த்ரர் பங்காளிகளுக்குள் முதல் முதல் டெப்யுடி கலெக்டர் உத்யோகம் வஹித்தவர். அப்போது தான் லார்ட் உவில்யம் பெண்டின்க் என்னும் கவர்னர் ஜெனரல் இந்தியர்களை உயர் பதவியில் நியமிக்கும்படி ஒழுங்கு ஏற்படுத்தினார். அந்த ஒழுங்கின் பயனை முதலில் பெற்றவர் ஈசான சந்திரரே. இங்க்லிஷ் ப்ரெஞ்ச் பாஷைகளிலே இனிமை கவிதை செய்து கீர்த்திபெற்ற தருபாலாதத்தை என்னும் பெண்மணியும் இந்த வம்சத்தில் பிறந்தவளே.

ஈசான சந்த்ரர் தம் உத்யோகத்தை முன்னிட்டு வங்காளத்தின் உள்நாட்டு பாகங்களிலேயே வஸித்து வந்தபடியால், ரமேச சந்த்ரரின் வாலிபப் பருவமானது வங்கநாட்டின் பசுமைகொண்ட நாட்டுப்புறங்களிலேயே கழிந்தது.

தாய் தந்தையர் தேகவியோக மடைந்தபின் ரமேசசந்த்ரர் தம் சிறு தகப்பனாராகிய சசிசந்த்ரரின் போஷணையின் கீழ் கல்விப்பயிற்சி செய்யத்தொடங்கினார். சசிசந்த்ரர் இலக்கியத்

தில் ஆர்வமுள்ளவர். ரமேசசந்த்ரர் ஆயுளளவும் இலக்கியத்தில் வைத்திருந்த வாஞ்சைக்கு இவரிடத்தில் வளர்ந்தமை ஒரு காரணமாயிருக்கலாமெனத் தோற்றுகிறது.

ரமேசபாபு 1864-ம் வருஷத்தில் பிரவேச பரீக்ஷையில் தேறினார். அவர் படித்துவந்த வித்யாசாலைக்குள் அந்தப் பரீக்ஷையில் தேறினவர்களுள் அவரே முதன்மையாய் நின்றார். 1866-ம் வருஷத்தில் அவர் எப். ஏ. பரீக்ஷையில் தேறி ஸர்வ கலாசாலையில் இரண்டாவதாக நின்றார்.

1868-ம் வருஷம் மார்ச்மீ 3வயில் ரமேச சந்த்ரரும், ஸ்ரீயுத விஹாரிலால் குப்தரும் தேசபூஜ்யரான ஸ்ரீயுத ஸுரேந்த்ரநாத பானர்ஜி வந்த்யோபாத்யாயரும் இங்கிலாந்துக்கு ப்ரயாணமானார்கள். ரமேசசந்த்ரரும், ஸ்ரீயுத விஹாரிலாலரும் தம்தம் ஸம்ரக்ஷண கர்த்தர்களின் அநுமதிபெறாமலே அவர்களுக்குத் தெரியாமல் நள்ளிரவில வீட்டைவிட்டு வந்துவிட்டார்கள். ஸுரேந்த்ர பாபு மாத்திரம் தம் பிதாவின் உத்திரவு பெற்றே இங்கிலாந்துக்குப் புறப்பட்டார். இம்மூன்று நண்பர்களின் உத்தேசமும் அவர்களுடைய வாழ்வின்கனவான் கொண்டிருந்த ஸிவில் ஸர்விஸேயாகும். அம்மூவருடைய வாழ்க்கைக்கனவும் நிறைவேறியது. அவர்களுள் இருவர்—ரமேச பாபுவும் விஹாரிலால் பாவும்—ஸர்க்கார் உத்தியோகத்திலேயே தம் வாழ்க்கையின் பெரும்பாகமான காலத்தைக் கழித்து பெயரும் புகழும் சம்பாதித்தார்கள். வங்காள நாட்டின் நல்லதிருஷ்டத்தினால் ஸுரேந்த்ரநாதர் ஸிவில் ஸர்விஸினின்றும் நீங்கி மாத்ருஸேவையில் அமர்வாராயினார்.

1869-ம் வருஷத்தில் ரமேச சந்த்ரரும், விஹாரிலாலும், ஸுரேந்த்ரநாதரும் ஸிவில் ஸர்விஸ் பரீக்ஷையில தேறினார்கள். அந்த வருஷத்தில் ஏறக்குறைய முன்னூறு ஆங்கிலர்கள் பரீக்ஷை கொடுத்தார்கள். ரமேச சந்த்ரர் இந்தக் கடினமான போட்டியில் புகழுடன் தேறி மூன்றாவதாய் நின்றார். ஆங்கில இலக்கியத்தில அவர் ஆங்கில பரீக்ஷார்த்திகளைத் தோல்வியுறச்செய்து எல்லாருக்கும், முதன்மையாய் நின்றார்.

மஹேச குமார சர்மா.

# இயற்கை ஆயுதங்கள்

## STUDIES IN ANIMAL LIFE
## 1. NATURAL WEAPONS

---

இவ்வுலகத்துள்ள ஒவ்வொரு ஜீவப்பிராணியும் தான் வாழ்ந்து ஸுகம் பெறுவதன் பொருட்டு, மற்றப் பிராணிகளோடும், தாவரங்களோடும் ஓயாப்போர் புரிகின்றது என்பது உயிர் நூலார் (Biologists), கொண்ட ஓர் கொள்கையாம். அக்கொள்கை உயிர் நூல் வல்லாரன்றி, மற்றவர்களும் அங்கீகரிக்கத் தக்கது என்பது நம்மைச் சுற்றிலுமுள்ள ஜீவராசிகளையும் அவை செய்யுங் கருமங்களையும் உற்று நோக்கினால் நன்கு விளங்கும். ஈக்களையும் கொசுக்களையும் தமது வலையில் சிக்கும்படி. செய்து முடிவில் தமக்கு இரையாக்கிக் கொள்ளும் சிலந்திப்பூச்சியையும், சிலந்திப் பூச்சி முதலியவற்றைக் கொன்றுதின்னும் கரப்பாம் பூச்சியையும்; கரப்பாம் பூச்சியும் தேளும், ஒன்றையொன்று உண்ணவேண்டிச் செய்யும் மிகக் கடுமையான யுத்தத்தையும், அதிற் செயங்கொண்ட தேளும் பல்லியும் முறையே ஒன்றோடொன்று எதிர்த்துச்செய்யும் போரையும், நோக்கியவர் இயற்கையில் எங்கும் இத்தகைய ஓயாப்போர் நடக்கின்றது என்பதை மறுக்கமாட்டார். இப்போர் எதற்காக நடக்கின்றது? மற்றவற்றைக்கொன்று தாம் வாழ்வதற்கே. ஆனால் இவ்விதச்சண்டையில், ஒன்று மற்றொன்றுக்கு உடனே இணங்காது, தன்னாலியன்றவளவு கொடும்போர் புரிந்து முடிவில் தோற்று இரையாகின்றது. இம்மல் யுத்தத்திற்கு உபகரணங்களாவன, இப்பிராணிகள் கொண்ட இயற்கை ஆயுதங்களே. ஈயும் கொசுவும் இறகுகளையும், சிலந்திப்பூச்சியானது தன் வலையையும், கரப்பாம் பூச்சியானது இறகையும் கொடிய பற்களையும், தேளானது இடுக்கிபோன்ற கைகளையும், விஷப்பையையும், பல்லியானது பற்களையும் கடின

மான தோலையும், கொண்டிருக்கின்றன. இங்ஙனம் மற்றப் பிராணிகளும், சில இயற்கை ஆயுதங்கள் பூண்டு வேறு பிராணிகளோடு யுத்தஞ்செய்து, தோற்றும் செயித்தும் காலம் செலுத்துகின்றனவாம். இவற்றைப் பற்றிச் சிறிது கவனித்தால், எவ்வளவுக்கெவ்வளவு ஒரு பிராணியானது சிருஷ்டிப் பொருள்களுள் உயர்ந்ததாக இருக்கின்றதோ, அவ்வளவுக்கவ்வளவு அது கொண்ட ஆயுதம் நுணுக்கமானதாயும், வினோதமானதாயும், இருக்கின்றது என்பது புலப்படும். சிருஷ்டிப் பொருள்கள் எல்லாவற்றிலும் உயர்ந்தவன் மனிதனல்லவா? பற்களும் நீண்டு வளர்ந்த நகங்களும், அவன் முதன்முதல் கொண்ட ஆயுதங்களாம். பின்பு சிறு கற்களைக் கையால் வீசியெறிந்தும், அதன் பின்பு அவற்றை வில்லிற் பூட்டி எறிந்தும், தனது எதிரிகளைவென்று வந்தான். நாகரீகம் அதிகரிக்கவே, துப்பாக்கிகளையும் பீரங்கிகளையுங் கண்டுபிடித்தான். இக்காலத்தோ வெடிகுண்டுகளையும், கப்பல்களையுடைக்கும்படி சமுத்திரத்தில் மறைவாக இட்டுவைக்கும் வினோதக் குண்டுகளையுஞ்செய்து ஆண்டுவருகிறான். ஆனால் மனிதன் இத்தகைய அற்புதமானவைகளைச் செய்வதற்கு அவனது புத்தியும் சாதுர்யமும் உதவி செய்கின்றன. செயற்கறிவு மிகக் குறைந்த கீழ்ப் பிராணிகளிலோ, தமக்கு இயற்கையாகவே யுண்டாயிருக்கும் ஆயுதங்களே பீரங்கிகளும், வெடிகுண்டுகளுஞ் செய்யும் வேலைகளைச் செய்கின்றன. சிங்கத்திற்கு மிருகேந்திரன் எனப் பெயரிட்டிருக்கிறது, சரியானதன்றோ? ஏனெனில், எந்தப் பிராணியானது அதன் காலடியோசையைக்கேட்டு நடு நடுங்குவதில்லை? எந்தப்பிராணியானது அதன் உக்கிரமான கர்ச்சிப்பைக் கேட்டுத் திடுக்கிடுவதில்லை? எந்தப் பிராணியானது அதன் பந்தம்போல் எரிகின்ற கண்களையும், கோரமான பற்களையும், பருத்துவளைந்த நகங்களையுங்கண்டு அது வரும்திக்கு விட்டோடி ஒளிவதில்லை? இவ்வண்ணமே, புலி முதலான வேறுமிருகங்களின் பற்களும் நகங்களும் அவைத் தம்மைக் காப்பாற்றிக்கொள்வதன் பொருட்டுக்கொண்ட ஆயுதங்களல்லவா? இன்னுஞ் சிலவற்றில் கொம்பே பேராயுதமாகின்றது. ஆடு மாடுகளிலும், சில வகை மான்களிலும், இக்கொம்பானது உட்புறத்து நீண்டு வளர்ந்த எலும்பினாலும் வெளிப் புறத்து நகம்போன்ற பொருளினாலுமாக்கப்பட்டிருக்கின்றது. கலைமான் முதலியவற்றின் கொம்போ எலும்பினாலாகாததானாலும், பல கிளைகள் கொண்டு அவற்றைப் பாதுகாப்பதற்கேற்ற கருவியாயிருக்கின்றது. இவ்வகைக் கொம்புகள் சில காலமிருந்து பிறகு உதிர்ந்துபோக, வேறு கொம்புகள் அவ்விடத்தே வளரும். காண்டாமிருகத்தின் கொம்பு வெகு கெட்டியும் உறுதியுமானது. அது பல உரோமங்கள் ஒன்று சேர்ந்து அமைந்ததோரங்கமாம். இவ்வித ஆயுதங்களைப் பற்றி வியக்கக்கூடியதொன்றுமில்லாவிடினும், வேறுசில மிருகங்களும், சீவப்பிராணிகளும் வெகு ஆச்சரியமான கருவிகள் கொண்டிருக்கின்றன. உதாரணமாக, முள்ளம்பன்றியைப் பாருங்கள். அதனுடம்பிலுள்ள ஒவ்வொரு உரோமமும், ஒவ்வொரு நீண்டு வளர்ந்த கூரிய முள்ளாக மாறியிருக்கின்றது. யாரேனும் அதைத் தொந்திரவு செய்தால் திடீரென்று அம்முட்களை நிமிர்த்திக்கொண்டு எதிரியின் முகந்தேகங்களையெல்லாம் இரத்தமாக்கிவிடும். நமது முள்ளம்பன்றியைப்போலவே ஐரோப்பிய நாடுகளில் ஒரு பிராணி இருக்கின்றது; அதற்கு எய்ப்பன்றி (Hedgehog) யென்றுபெயர்; நமது பெருச்சாளியின் அளவானது. அதுவும் முட்பன்றியைப்போல் தேகமுழுவதும் முட்கள் கொண்டிருக்கின்றது. அது சுயேச்சையாய்த் தோட்டங்களில் உலாவி, பூஞ்செடிகளையும், காய்ச்செடிகளையும், தன்னிஷ்டப்போல் நாசமாக்கும். ஆனால், யாரேனும் அதைப்பார்த்து

அதைப்பிடிக்கமுயன்றால் தன்னுடம்பைத் நிமட ரென்று பந்துபோல் உருட்டிக்கொள்ள, முட்களெல்லாம் நிமிர்ந்து நிற்கும். அப்போது அதைப் பயமின்றித் தொடுவார் யாருமில்லை.

தென்னிந்திய மலையடிகளில் எறும்பு தின்னி (Ant-eater) என்ற ஒரு பிராணி வசிக்கின்றது. அது உருவத்தில் கீரிப்பிள்ளையைப் போலிருக்கும். சென்னப்பட்டணத்தில் "செத்த காலேஜி" யென்று சொல்லப்பட்டதும், அற்புதப்பிராணிகளும், பொருள்களுஞ் சேகரித்துவைத்து மிருக்குஞ் சாலையில் இறந்துபோன இப்பிராணியின் பஞ்சடைத்த உருவங்கள் இரண்டு மூன்று வைத்திருக்கின்றார்கள். அதன் தேகமெல்லாம், தட்டையான சிறுசிறு செதிள்கள் மூடிக் கொண்டிருக்கின்றன. அச்செதிள்கள் ஒவ்வொன்றும் முதன் முதல் உரோமமாயிருந்து பிறகு செதிள்களாகமாறி அப்பிராணிக்குத் தன்னைக் காப்பாற்றிக்கொள்ள ஏற்பட்டதோர் ஆயுதமாம். அப்பிராணியை யாரேனும் எதிர்த்தால், முகத்தை நடுவில் வைத்துக்கொண்டு உடம்பை ஒரு சுருள் போல சுற்றிக்கொள்ளும். அந்நிலைமையிலிருக்குங்கால் துப்பாக்கியாற் சுட்டாலும், அப்பிராணிக்கு யாதொரு அபாயமு முண்டாகாது. அச்செதிள்கள் யாவுமொன்றாய்ச் சேர்ந்து அதற்கு ஓர் இரும்பாற் செய்த கவசம் போல் உதவுகின்றது. எறும்புதின்னியில் செதிள்கள் தனித்தனியாய்ப் பிரிந்து நிற்கின்றன. ஆனால் ஆமையின் ஓட்டிலோ அந்தகைய செதிள்கள் ஒன்றோடொன்று ஒட்டிக்கொண்டு ஆமை சிறிதாயிருக்கும் போதே ஒரு கெட்டியான கூடாகப் பின்னப்படுகிறது. தலையுங்கால்களு மட்டும் வெளிவரும்படி அக்கூட்டில் துவாரங்களிருக்கின்றன. யாரேனும் எதிர்த்துத் தொந்திரவு செய்ய முயல்வரேல், தலையையுங் கால்களையுஞ் சரேலென்று உள்ளேயிழுத்துக்கொள்ள, தலையின்மேலும் கால்களின் நுனியிலும் பலமாக அமைந்திருக்குஞ் செதிள்கள் அத்துவாரங்களைச் செம்மையாய் மூடிக்கொள்ளும். அச்சமயத்து அந்தக் கூடானது பெரும் மதிள்கள் கொண்ட கோட்டையினும் வலுத்ததாய், யாவராலும் வெல்லக் கூடாததாகும்.

இன்னுஞ்சில ஜீவப்பிராணிகள் தம்மைக் காப்பாற்றிக்கொள்ள வேறுவிதக் கருவிகள் கொண்டிருக்கின்றன. தேரை யென்னும் ஒரு வகைத் தவளை அதைத் தொட்டவுடன் ஒருவித நீரைப்பீச்ச, அதைக்கண்டு பயந்து தேரையைவிட்டு விலகுவார் எத்தனையோபேர். இங்ஙனமே, பீரங்கி வண்டென்று பெயர்கொண்டு நமது வீடுகளில் இராக்காலங்களில் சுவற்றினோரமாய் ஓடி நடமாடும் சிறுவண்டொன்றைத் தொட்டால் அதன் பின்புறத்தினின்று ஒரு வெடிச்சத்தங் கேட்கும். அது காரணம்பற்றியே அதற்குப் பீரங்கி வண்டென்று பெயர். அச்சத்தம் ஒரு திராவகம் வெளிவருவதா லுண்டாகின்றது; அத்திராவகம் சிறுபூச்சிகள் முதலானவற்றை உடனே கொல்லும். மற்றப் பிராணிகள் அச்சத்தத்தைக் கேட்டும், அத்திராவகத்தின் நாற்றத்தை மோந்தும் விலகி ஓடிப்போம். இதுவுந் தவிர திராவகம்பட்ட இடமெல்லாம் வெந்துபோம். பாம்புந் தேளும் விஷங்கொண்டிருப்பதும் தம்மைக் காப்பாற்றிக்கொள்வதற் கேற்பட்ட கருவியேயாம். இவ்வண்ணமே வேறு சில பிராணிகள் வேறுவித சாதனங்கள் கொண்டிருக்கின்றன. அவற்றைப்பற்றிப் பின்னொரு சமயம் விவரித்தெழுதுவோம்.

வி. நரஸிம்மய்யங்கார், பி.ஏ., எப். எல்.

# கைத்தொழிலல்லது மெய்த்தொழிலில்லை

## NO INDUSTRY : NO WORK

---

ஒரு தேசம் முன்னுக்கு வரவேண்டுமானால், அதிலுள்ளவர்களுக்கு ஞானம், ஆரோக்யம், பணம் மூன்றும் வலுத்திருக்கவேண்டும். இம்மூன்றில் ஒன்று குறைந்தாலும் தேசத்திற்கு ஹானியுண்டாகும். நாகரீகத்தில் பெருமை யடைந்த மேனாட்டுத் தேசங்களிலும் கீழ்நாட்டுத் தேசங்களிலும் புதிய கண்டத்திலுள்ள தேசங்களிலும் ஞானம் பெருக்கக் கலாசாலைகளும், ஆரோக்யமும் தேகவலிமையும் ஓங்க தேகப்பயிற்சி சாலைகளும், வியாபாரம் பிரபலப்பட அதற்கென்றே வித்யாசாலைகளும் நிலைநாட்டி ஜனங்களும் ராஜாங்கத்தாரும் ஒருங்குகூடி முயன்று வருகிறார்கள். முயற்சி விசேஷத்தால், இரண்டொரு தேசம் தவிர ஐரோப்பா முழுமையும், அமெரிக்காவில் சேர்ந்த மாகாணங்களும், கனடாவும், ஆசியாவில் ஜப்பானும் இக்காலத்தில் நாகரீகத்திலும் பணத்திலும் பிரபலப்பட்டிருக்கின்றன. உலகத்திலுள்ள எல்லா தேசங்களிலும் மேலோங்கியது அங்கில தேசம். அங்கிலேயர்கள் உலகம் முழுமையும் பரவி அநேக தேசங்களைக் கைப்பற்றி வெகு சீர்திருத்தங்கள் செய்து நன்கு ஆண்டுவருகிறார்கள். அத்தேசத்திய வியாபாரிகள் வியாபாரச் சக்கிரவாத்திகளாயும் பூலோகத்தில் பிரத்தியக்ஷமான குபேரர்களாயும் விளங்குகிறார்கள். அவர்களுடைய கலாசாலைகளுக்குப் பலவித நூலகளின் மேற்புறமான படிப்பைப் படிப்பதற்காகப் பல இதர தேசங்களிலிருந்து கல்விமான்களான சிறுவர்கள் அனுப்பப்பட்டு அவரவர்கள் படிப்பதற்கு எடுக்கப்பட்ட நூல்களில் கை தேர்ந்தவர்களாய் வருகிறார்கள். ஆங்கிலேய ராணுவ முறைமைக்கு நிகரான ராணுவ முறைமை உலகமெங்குமில்லை. அவர்கள் வியாபார மரக்கலங்கள் ஓடாத கடலில்லை. அவர்கள் முயற்சிக்குச் சாத்தியமாகாத கருமமில்லை.

இவ்விதமாய் எவ்விதத்திலும் தேர்ச்சியடைந்த பெருமை பெற்றோங்கிய ஆங்கிலேயர்களுடைய ஆளுகையாலுண்டாகும் நன்மைகளை நம்மாரிய நாடு அடையப் பெற்றிருப்பது நம்மவர்களுடைய பாக்கியமென்றே சொல்லவேண்டும். இவ்வுண்மை நம் தேசசரித்திரத்தைப் படித்த கல்விமான்களுக்குப் புலப்படும். இக்காலத்தில் ஆங்கில தேசம் எப்படி முதற்றரமென்று மொழியும்படி மாக்ஷிமை தங்கி விளங்குகின்றதோ அப்படியே, நம்தேசமும் சுமார் ஒரு ஆயிரம் வருஷங்களுக்கு முன்வரையில் அக்காலத்தில் நாகரீகமடைந்திருந்த எல்லா தேசங்களிலும் எவ்விதத்திலும் சிறப்புற்றோங்கியே விளங்கிவந்தது. பிற்காலத்தில் இந்நாட்டிற்குப் பல விஷயங்களிலும் வலிமை குறைந்ததற்குக் காரணம் இந்துதேச சரித்திரம் படித்த வித்வான்களுக்குத் தெரிந்திருக்கும். இவ்விடத்தில் அக்காரணங்களைப் பரிசோதிப்பது அவசியமில்லை.

ஆங்கிலேயர்கள் வந்ததால் இந்துதேசத்திற்கு க்ஷேமம் பிறந்ததென்று சொல்லலாம். அரசன்போலவே பிரஜைகளும் இருப்பார்கள் என்பது உண்மையானால், ஆளுபவர்களுடைய குணவிசேஷங்களெல்லாம் ஆளப்படுகிறவர்களுக்கும் காலகிரமத்தில் வரவேண்டியது அவசியமே. இதற்கு அத்தாக்ஷியாக மேனாட்டுப்படிப்பு, ஜாதிவர்ணாசிரம வித்தியாஸமில்லாமல் எல்லோருக்கும் கிடைக்கும்படி செய்யப்பட்டுக் கல்விக்களஞ்சியமாய் ஆயிரக்கணக்காய் அநேகம்பேரைச் செய்திருப்பதே போதும். இதைத்தவிர நமது துரைத்தனத்தார் தேக ஆரோக்கியத்திற்கு வைத்தியசாலைகளும் நீர்ப்பாய்ச்சல்களுக்குக் கால்வாய்களும் ஜனப்போக்குவரவிற்கு ரஸ்தாக்களும் இருப்புப் பாதை

களும் இன்னும் பலவித நன்மைகளும் புரிந்து வருகின்றார்கள். மேலும் நகரங்களினுடையவும் கிராமங்களுடையவும் ஆளுகையை நமக்கே அளித்து ராஜ்யம் நிர்வஹிக்கும் விஷயத்தில் நம்மவர்களுக்கு ஞானப்பெருக்கு உண்டாக்கிக்கொண்டு வருகிறார்கள். இப்பொழுது தான் இந்திய ராஜப்பிரதிநிதியின் சபையிலும், இராஜதானிகளாகிய மாகாணச்சட்ட நிர்மாண சபையிலும், உத்தியோகத்திலில்லாத பிரபுக்களின் தொகை அதிகப்படுத்த சட்ட நிர்மாணம் பண்ணப்பட்டுச் சக்கிரவர்த்தியவர்களின் உத்திரவுபெற்று இச்சைப்படி நூதன சபைகள் கூடி இருக்கின்றன.

இதுவரையில் ஆங்கிலேயர்களால் படிப்பிலும், நடுநிலைதவறாத நீதியிலும், ஜீவரக்ஷணத்திலும், சொத்து ரக்ஷணத்திலும், கிருஷிவிருத்தியிலும், இவை முதலான பலமார்க்கங்களிலும் நம்மவர்களுக்கு அபிவிருத்தி உண்டாயிருக்கிறது. நாம் அடைந்திருக்கும் சீர்திருத்தங்கள் பலவாயிருப்பினும் இன்னும் அடைய வேண்டியவை இதுவரையில் நடந்திருப்பதைவிட பதின்மடங்கா யிருக்கின்றன. அவைகள் காலகிரமத்தினால் கிடைக்குமே யொழிய ஒரே க்ஷணத்தில் எதிர்பார்க்கமுடியாது. ஏனெனில், சக்தி பெருகப்பெருகத்தான் புதிய அதிகாரங்களை நிர்வஹிக்கவும் புதிய சீர்திருத்தங்களைப் பெறவும் நாம் யோக்யர்களாவோம். ஈசுவர கடாக்ஷத்தால் அரசுபுரியும் ஆங்கிலர்களுக்கும் நமக்கும் நட்பு பலப்பட்டு இருவரும் ஒருமையாய் வாழ்வதினால் இந்துதேசம் மேன்மேலும் ஓங்கி வளர்ந்து உலகத்திலுள்ள எல்லாநாகரீகம் மிகுந்த தேசங்களுக்கெல்லாம் நடுநாயகமாய் விளங்குமென்பதற்கு ஐயமில்லை.

கருணைக்கடலாகிய கடவுளின் காருண்யம் ஆரியாவர்த்தத்திய ஜனங்களுக்கு விசேஷமாயிருப்பினும், அதையே நம்பி கையைக் கட்டிக்கொண்டு அஸமஞ்சர்களாய் நாம் ஜபித்துக்கொண்டிருப்பது சரியோ. அரசுநிலைமை நடாத்தும் ஆங்கிலேயர்களுடைய நம்மவர்களின் க்ஷேமத்தைக் குறித்த பிரயத்தினங்கள், சீக்கிரம் நிறைவேற நாமும் ஒருங்குசேர்ந்து முயற்சி செய்வது நம்கடமை யல்லவா? மரமேறுபவன் தான் உச்சிபோகும் வரையில், கீழிருப்பவன் தன்னைத் தாங்கியிருக்க வேண்டுமென்று எதிர்பார்த்தால் நடக்குமா? துரைத்தனத்தார்கள் செய்யும் உதவியைக் கொண்டும் நம் சொந்த பிரயத்னத்தினாலும் எந்தெந்த விஷயங்களில் நாம் குறைவு பெற்றிருக்கிறோமோ, அவ்விஷயங்களிலெல்லாம் நாம் முன்னுக்கு வரும் வழியைப் பார்க்கவேண்டும்.

1857-ம் வருஷத்தில் சர்வகலா ஸங்கங்கள் ஏற்பட்ட காலம் முதற்கொண்டு தற்காலம் வரையில் ஆங்கிலபாஷையை எழுதவும் பேசவும் நம்மவர்களுக்குச் சக்தி உண்டானதும் தவிர மேனாட்டில் பிரபலமடைந்த சிற்சில சாஸ்திரங்களிலும் ஞானம் மிகுந்து கொண்டிருந்தது. இதை இவ்விடத்தில் விஸ்தரிக்க வேண்டியது அவசியமில்லை. இதுகாறும் நம்மவர்கள் தேர்ச்சியடைந்த மேனாட்டுப் படிப்பெல்லாம் இத்தேசத்தாருக்குக் கைத்தொழிலாவது வியாபாரத்திலாவது மேன்மையடையச்செய்ய உபயோகப் படாததாயிருந்தது. இக்காரணத்தினால்தான் நம்மவர்களில் அநேகர் ஆங்கிலர்களைப்போல் இங்கிலீஷ் பேசுவார்கள். ஆனால் ஆங்கிலேயர்கள் கைபோல் நம்மவர்கள் கைவேலை செய்யாது. ஆங்கிலேயர்களைப்போல் எழுதுவார்கள். ஆனால் அவர்கள் ஒருங்குகூடி வியாபாரத்தில் ஓங்குவது போல் இவர்களுக்கு ஓங்கமாளாது. ஆங்கிலேயர்களைப்போல் நடை உடை பாவனைகளில் நடிப்பார்கள். ஆனால் அவர்களைப்போல் பணம் பெருக்கடைந்து சுகமடையத் தெரியாது.

படிப்பிற்குப்பயன் தருமம், அர்த்தம், காமம், மோக்ஷமென்ற நான்காகும். தருமம், காமம், மோக்ஷமென்ற இம்மூன்றும் அர்த்தத்தைக்கொண்டே கிடைக்கக் கூடியன.

பொருளில்லாதவரையாவது பொருளில்லாத தேசத்தையாவது ஒருவரும் பொருட்டாய் மதியார்கள். இதனாலேதான் "பொருளல்லவரைப் பொருளாகச் செய்யும், பொருளல்லதில்லை பொருள்" என்று அருளினர் தெய்வப் புலமை வாய்ந்த திருவள்ளுவ நாயனர். ஒரு தேசம் பொருளில் மேன்பட மூன்று வழிகளுண்டு. முதலாவது அத்தேசத்திலுள்ளவர்களுக்கு வேண்டிய ஸாமான்களை அவர்களே செய்துகொள்ள வேண்டும். இதனால் அத்தேசத்திய பணம் சாமான்களுக்கென்று வெளியில் போகாது. சுதேசிகள் சம்பாதித்த பணம் தேசத்திலேயே தங்கும். இரண்டாவது பிறதேசத்துக்குச் சுதேச சாமானை யனுப்பி அதனால் பிறதேசத்தார் பணத்தைச் சுதேசத்திற்கு வரும்படி செய்ய வேண்டும். மூன்றாவது ஒரு தேசத்தில் பணம் சம்பாதிக்க எவ்வித ஹேதுக்கள் இருந்தபோதிலும், அந்த ஹேதுக்களை யெல்லாம் அத்தேசத்தவர்கள் தங்களுக்குப் பயன்பட உபயோகப்படுத்திக்கொள்ள வேண்டும். இரண்டாவது வழிக்கு ஸௌகரியமில்லாவிட்டாலும், முதலாவது வழியையும் மூன்றாவது வழியையுமாவது ஒருதேசத்தினவர் கைப்பற்றாவிட்டால், தேசத்திற்கு க்ஷேமக் குறைவுண்டாய்விடும். கீழ் நாட்டுத் தேசங்கள் தற்காலத்தில் க்ஷேமக் குறைவடைந்ததற்கு இதுவே காரணமாம். மேனாட்டுத் தேசங்களும், அமெரிக்காவில் சிற்சில தேசங்களும், க்ஷேமப் பெருக்கடைந்ததற்கும் இதைத் தவிர வேறு காரணமில்லை.

ஏழைத்தனமடைந்து வருந்துமோர் தேசம் பிறதேசங்களுக்குச் சாமான்கள் அனுப்ப முயல்வதற்கு முன்பாக தனக்கு வேண்டிய சாமான்களைத் தானே செய்துகொள்ள முயலவேண்டும். ஒவ்வொரு தேசத்திற்கும் வேண்டிய சாமான்கள் விளைபொருள்கள், கைத்தொழில் சாமான்கள், என இருவகையாம். விளைப்பொருள்கள் கிருஷியால் விருத்தியடையும். இதர சாமான்கள் கைத்தொழிலால் உற்பத்தியாகும். கைத்தொழிலா லுண்டுபண்ணப்பட்ட ஸாமான்கள் வியாபாரத்தால் விருத்தியடைய வேண்டும். வியாபாரியும் முதலுமில்லாமல் கைத்தொழில் விசேஷமாய் அபிவிருத்தியடைய இடமில்லை. ஆகையால் கிருஷி, வாணிஜ்யம் என்றஇரண்டும் ஒருதேசத்திற்குப் பொருள்சம்பாதிக்க இரண்டு கைகள்போலும். இவைகளை மேன்படச் செய்யும்படிப்பு, தனார்ஜன விஷயத்தை நுட்பமாய்ப் பார்த்து கிருஷி, வாணிபமென்ற கைகளைத் தன் தன் கருமத்தில் பிரவேசித்து நடப்பிக்க கண்கள் போலும். ஆகையால் ஒரு தேசம் நாகரீகத்தில் ஓங்கிய இக்காலத்திய பலதேசங்கள் போல முன்னுக்கு வர கிருஷி, வாணிபம் இவைகளைக் குறித்தபடிப்பு, இவைகளில் மேம்பாட்டை அடையவேண்டும். கிருஷி,வாணிபம் இரண்டும் கைத்தொழிலில் அடங்குமாகையால், ஒரு தேசத்தின் க்ஷேமத்திற்குக் கைத்தொழிலும் அதைச்சேர்ந்த படிப்பும் இன்றி அமையாதவையாம். கைத்தொழில் மேன்பாடு அடைந்தாலொழிய, ஒரு தேசத்திய பணம் அதிலேயே தங்கி நிற்காது. புதிய பணமும் சேராது. கைத்தொழிலை அலக்ஷியம் பண்ணும் தேசம் வறுமையாலும், பஞ்சத்தாலும் வருந்தும். பணமில்லாதவனுக்கு இவ்வுலகமில்லை யென்பது பிரத்யக்ஷமாய்த் தெரிந்தவிஷயம். தனத்தினாலல்லது தருமத்திற்கு ஸாதனமில்லை யாகையால், வறுமையால் வருந்துவோர்க்கு அவ்வுலகுமில்லை. உழைப்பினாலும், கைத்தொழிலினாலும் எதுவும் பொருந்தும். இது காரணம்கொண்டே "கைத்தொழிலல்லது மெய்த்தொழிலில்லை" யென்று இவ்வியாஸத்திற்குப் பெயரிட்டோம். வறுமையாலும் பஞ்சத்தாலும் வருந்தும் இந்து நாட்டிற்குச் சுகம் விளையவேண்டுமானால் கைத்தொழிலைப் பெருகச் செய்வது நம் முதற்றொழிலாகையால், இது விஷயமாய்ச் சமயம் வாய்த்தக்கால் வியாஸங்கள் இப்பத்திரிகையில் எழுதுவோம்.

ஏ. பஞ்சாபகேசய்யர், எம்.ஏ., எல்.டி.

# இத்தேசத்தின் பாசன முறைகள்

## IRRIGATION IN INDIA

வேளாண்மையை உயிர்த் தொழிலாய்க் கொண்ட நமது தேசத்தில் ஜனங்களின் க்ஷேமத்திற்குப் பயிரிடும் முறைகளும் அவற்றின் உதவிகளுமே முக்கியகாரணமன்றோ? இப்போதுள்ள அமைதியாலும் துரைத்தன நன்முறைகளாலும் ஜனத்தொகையின் பெருக்கத்திற்கு இடையூறுக ளற்றுப்போயின. குடிகள் அதிகமாக அதிகமாகப் பயிரிடப்படும் நில்ங்களும் அதிகமாகின்றன. ஏரையே காணாத வறண்ட பூமியைக்கூட பயிர்செய்து பிழைப்பதற்கு முயலுகிறார்கள். எத்தேசத்திலும் முதல் முதல் பயிர்த்தொழிலுக்குச் சுலபமான நிலங்களையே பயிரிடுகிறார்கள். ஜனங்களின் பெருக்கத்தால் ஏராளமான உணவுப்பொருள்களுக்குக் கிராக்கி ஏற்பட ஏற்பட, ஸுலபமான பாசன வழிகளில்லாத நிலங்களையும் பயிர்செய்ய ஆரம்பிக்கிறார்கள். எத்தேசத்திலும் நிலங்களின் பரப்பு வரயறைக்குட்பட்டதே. பிணி, பஞ்சம், போர் முதலான கஷ்டங்களில்லாவிடின் பிரஜா விருத்திக்கு எல்லையே இல்லை. இக்காரணம்பற்றியே ஜனங்களின் பெருக்கத்தால் வேளாண்மைக்கு வேண்டிய சௌகரியங்களைப் பெறாத நிலங்களும் சாகுபடி செய்யப்படுகின்றன.

இவ்விதம் விளைபொருள்களுக்குக் கிராக்கி உண்டாக உண்டாக, ஆறு, குளம், ஏரி முதலிய ஜலாசயங்களுக்கு வெகு தூரத்திலிருக்கும் நிலங்களைக்கூட ஒருவாறு பயிர் செய்ய வழிகளைத் தேடுகிறார்கள். மேலும் இத்தேசத்தில் சென்ற நூறு வருஷங்களாகப் பெருகிவரும் அமைதியால் ஜனப் பெருக்கத்திற்கு எவ்விதமான இடையூறுகளும் ஏற்படவில்லை. ஆகையால் மலை நாடுகளிலும் காடுகளிலுமுள்ள நிலங்களைக்கூட பயிர் செய்ய உபாயங்களைத் தேடுகிறார்கள். அன்றியும் நமது நாட்டில் மேகத்தையும் மழையும் நம்பிக்கொண்டு நிலத்தைப் பயிரிடுதல் மடமையாகும். இப்பெரிய கண்டத்தில் மேற்கு வடகிழக்கு நாடுகளில் ஏராளமான மழை பெய்கின்றது. இத்தேசத்தின் மத்தியிலுள்ள சில பாகங்களில் திக் விஜயம் செய்யும் வீரனுடைய படையைப்போல் வரிசை வரிசையாக ஆகாய மார்க்கமாய் விரைந்து செல்லும் மேகங்களைக் கண்குளிரப் பார்ப்பதே பெரும் பயனாக விருக்கின்றது. வடமேற்கு பாகங்களில் இந்தக் காட்சியுமில்லை. ஆகையால் செல்வவான்களுடைய பொருள் ஏழைகளுக்கும் பயன் படுவதுபோல், மழை மிகுதியாயுள்ள மேற்கு வடமேற்கு பாகங்களிலுள்ள மேட்டுப் பூமிகளின் ஜலாசயங்கள் மற்ற விடங்களுக்கும் உபயோக மாகின்றன.

ஆகையால் இப்பெரிய கண்டத்தில் தொன்று தொட்டுப் பாசன முறைகளைக் கவனிப்பதும், திறமைப் படுத்துவதும், முக்கிய அரசியல் கடமைகளாகவே இருந்து வருகின்றன. ஜலாசயங்களைக் கட்டலும், கால்வாய் குளங்களை வெட்டலும், பாசன முறைகளைக் கவனித்தலும் தற்கால சுகத்திற்கும் பிற்கால சுகத்திற்கும் காரணமான முக்கிய தருமங்களென்றே குடிகளும் அரசர்களும் நினைத்து வந்தார்கள். இவ்வண்ணமே இப்போதுகூட துரைத்தனத்தின் ஊதியத்தின் ஒருபகுதியானது இத்தேசத்துள்ள ஜலாசயங்களைப் பலப்படுத்தவும், கால்வாய்களைச்சீர்படுத்தவும் உபயோகமாகின்றது. சற்றேறக்குறைய 70 கோடி ரூபாயை இவ்வழியில் செலவிட்டிருக்கிறார்கள். மேன்மேலும் அதிகப்பணத்தை இவ்விஷயத்தில் செலவிட வேண்டுமென்றும் அவாவுற்றிருக்கிறார்கள்.

மேட்டு நிலங்களிலிருந்து தாழ்ந்த பூமிக்கு ஜலத்தைக்கொண்டு வருவதுமல்லாமல், பள்ள பூமியினின்றும் மேட்டுப் பாகங்களுக்குத் தண்ணீரை எழுப்புகிறார்கள். இவ்வழியில் குடிகளும் துரைத்தனத்தாரும் வெகு ஊக்கத்தைக் காண்பித்திருக்கிறார்கள். அநேகவிடங்களில்

இறைகூடை, ஏத்தம், கபிலை, திருகு ஏத்தம் முதலிய ஸாதனங்களைக்கொண்டு கிணறுகளினின்றும் ஆறுகளினின்றும் ஜலத்தை எழுப்பப் பலர் கண்டிருக்கலாம். இத்தேசத்தின் வடபாகங்களில் படத்திற்காட்டிய ஸாதனங்களும் உபயோகமாகின்றன. ஆயினும் இவ்விதஸாதனங்கள் நீரைச் சிறிது உயரந்தான் எழுப்பக்கூடும். மேலும் ஏராளமான ஜலத்தை இவ்விதம் எழுப்பமுடியாது. ஆகையால் சிறந்த யந்திர ஸாதனங்களைக்கொண்டும் அணை, அணைக்கட்டு முதலான தடைகளாலும் ஏராளமான நீரை எழுப்பி, இவ்விதமான ஜலாசயங்களினின்றும் கால்வாய்கள் வழியாய் வெகுதூரத்திலிருக்கும் நிலங்களுக்குக் கூட நீரைப் பாய்ச்சுவது துரைத்தனத்தாரின் கடமையாய் விட்டது. ஆகையால் கோடிக்கணக்கான பணத்தைப் பாசனமுறைகளிலும் ஸாதனங்களிலும் செலவு செய்து, வேளாண்மையில் அமர்ந்துள்ளோர்களுக்கு உதவி புரிவது அடிக்கடி நேரிடும் பஞ்சத் துன்பத்தைக் குறைக்குமன்றோ?



ஜலாசயங்களின் அமைப்பும் பாசனமுறைகளும் பற்பல விடங்களில் பற்பல விதமாய் இருக்கின்றன. இந்தியாவின் வடமேற்கு பாகத்தில் ஸிந்து நதியிலும் அதன் உபநதிகளிலும் ஏராளமான வெள்ளம் சிலமாதங்களில் பெருகுகின்றது. இப்படிப் பெருகும்போது, இரண்டு பக்கங்களிலும் மேடான கரைகளில் வெட்டப்பட்ட கால்வாய்களின் வழியே ஜலம் ஓடி வெகு தூரத்திள்ள நிலங்களுக்குப் பாய்கின்றது. இவ்விதம் ஜலம் பெருகும்போது மாத்திரம் உபயோகப்படும் கால்வாய்களுக்கு வெள்ளக் கால்வாய்களென்று (Inundation Canals) சொல்லலாம். இம்மாதிரியான பாசனமானது எப்போதும் நம்பத்தக்கதில்லை. வெள்ளம் பெருகாவிடின் இவைகளால் நிலங்களுக்கு எவ்விதமான பிரயோஜனமுமில்லை. ஆகையால் மே (சித்திரை) மாதம் முதல் ஸெப்டம்பர் (ஆவணி) மாதம் வரையில் வெள்ளம் பெருகும் காலத்தில் மட்டும் இந்தக் கால்வாய்கள் பாசனத்திற்கு உபயோகப் படுகின்றன. சற்றேறக்குறைய 45 லட்சம் ஏகராக்கள் இக்கால்வாய்களால் பாய்ச்சப்படுகின்றன.

இந்தியாவின் மற்றபாகங்களில் ஆறுகளின் குறுக்கே அணைகளைக்கட்டி, ஜலத்தைத்தேக்கிப் பக்கங்களில் வெட்டப்பட்ட கால்வாய்களின்வழியே அதனைப்பாய்ச்சி நிலங்களுக்கு உபயோகமாகச் செய்கின்றார்கள். அநேகமாய் இம்மாதிரியான கால்வாய்கள் ஜீவநதிகளைப்போல் எப்போதும் பிரவாஹமுள்ளனவா யிருக்கின்றன. கங்கை, கோதாவரி, கிருஷ்ணா, காவேரி முதலிய தீரங்களில் இக்கால்வாய்கள் பெரும்பாலும் உள்ளன. ஆங்கிலேய அரசியலுக்கு வெகு காலம் முந்தியே பிரூஸ் டோக்லக், ஆக்பர், கிருஷ்ணராயர் முதலான அரசர்கள் கால்வாய்களை உண்டாக்கிக் குடிகளுக்கு அருள்புரிந்தார்கள். இக்காலத்திலும் கால்வாய்கள் அணைக்கட்டுகள் முதலான உபாயங்களைப் பார்ப்பவர் வியக்கும்படி செய்துவருகின்றார்கள். எந்தவிடத்தில் இரண்டு மலைகளுக்கு நடுவே குறுகலான வழியில் நதி வெளிப்படுகின்றதோ அந்த விடத்தில் ஸாதாரணமாக அணையைக் கட்டுகின்றார்கள். ஆற்றின் அகலத்தையும் ஜலத்தின் பெருக்கத்தையும் கணக்கிட்டு 15-அடி முதல் 160-அடிவரையில் உயரமாய் அடியில் அகலமாயும் மேலே போகப்போக அகலக்

குறைவாகவும் அணைகளை அமைக்கிறார்கள். இவ்விதமாகவே மதுரைக்குச் சமீபத்தில் பேரா



ற்றின் அணையையும், மைஸூர் மாகாணத்தில் மாரிகணவாய் அல்லது வேதவதியின் அணையையும் அநேக ஆச்சரியமான யந்திர ஸஹாயங்களைக்கொண்டு கட்டி உபயோகமற்று ஓடிக்கொண்டிருந்த ஜலத்தை வளமுள்ள நிலங்களுக்குப் பிரயோஜனப்படுத்தி யிருக்கிறார்கள். இவைகளுக்குச் செலவு செய்த ஏராளமான பொருள் வீணன்று. தொன்றுதொட்டு நீரைக் காணாத வறண்ட பூமியெல்லாம் இச் சிறந்த உபாயங்களாலேயே மனிதர்களுக்கு உபயோகத்திற்கு வரவேண்டும். இக்காரணம்பற்றியே குளங்கள் ஏரிகள் முதலான ஜலாசயங்களைப் பலப்படுத்துவதும், பழைய கால்வாய்களைப் புதுப்பித்தலும், புதிய கால்வாய்களை வெட்டலும், வேளாண்மையையே பெரும்பாலும் நாடிவருகிற குடிகளுக்குப் பாசன முறைகளில் சகாயம் செய்வதும், இத்தேசத்தில் அரசுபுரிவோர்களுக்குச் சிறந்த கடமைகளென்றே கொள்ளவேண்டும்.

மற்றெல்லா மாகாணங்களைவிட நம்முடைய மாகாணத்தில் பாசன முறைகளை வெகுகாலமாகவே கவனித்து வருகிறார்கள். கிருஷ்ணா, கோதாவரி, காவேரி முதலான நதிகளின் தீரங்களில் அநேக அணைக்கட்டுகளாலும் கால்வாய்களாலும் சற்றேறக்குறைய 24-லட்சம் ஏகராக்களைப் பாய்ச்சுகிறார்கள். அநேக விடங்களில் பழைய கால்வாய்களையும் அணைகளையும் துரைத்தனத்தார்கள் புதுப்பித்திருக்கிறார்கள். இன்னும் இவ்வழியில் செய்யவேண்டிய வேலைகள் எவ்வளவோ இருக்கின்றன. பல்லாரி, அநந்தபுரம், கர்நூல், கடப்பை, நெல்லூர் முதலான ஜில்லாக்களில் பாசன ஸாதனங்களில்லாமல் வெகு விசாலமான நிலங்களெல்லாம் மனிதர்களுக்கு உபயோகமில்லாமல் தரிசாகக் கிடக்கின்றன. இவற்றைக்கூட துங்கபத்திரா நதியினின்றும் கால்வாய்களை வெட்டி வேளாண்மைக்கு உபயோகமாகச் செய்யவேண்டுமென்று முயன்றுவருகிறார்கள்.

ஸ்வதேச ராஜ்யங்களிலும் இவ்வண்ணமே செய்து வருகிறார்கள். இவற்றுள் மைஸூர் ராஜ்யம் சிறந்ததென்றே சொல்லவேண்டும். இந்நாட்டில் சற்றேறக்குறைய நாற்பதினாயிரம் குளங்களிருக்கின்றன. உயர்ந்த விடத்திலுள்ள குளங்கள் நிரம்பினவுடன் அதிக ஜலம் தாழ்ந்த குளங்களிற் பாய்ந்து இவைகள் நிரம்பினவுடன் இன்னும் தாழ்ந்த குளங்களும் நிரம்புகின்றன. இவ்விதம் குளங்கள் ஒன்றோடொன்று பிணைக்கப்பட்டிருக்கின்றன. மேலும் கணவாய்களின் வழியே ஓடுகிற நதிகளைப் பலமான அணைகளால் தடுத்து அவற்றின் ஜலத்தைத் தேக்கிப் பாசனத்திற்கு உபயோகிக்கிறார்கள். நிஜாம் ராஜ்யத்திலும் சென்ற இருபது வருஷங்களுக்குள்ளாக ஏழாயிரம் குளங்களைப் செப்பம் செய்திருக்கிறார்கள்.

இம்மாதிரியான பாசன முறைகளுமேற்பட்டு, விளைபொருள்களும் இருப்புப்பாதைகளின் வழியே பலவிடங்களுக்கும் உபயோகப்பட்டு வர வர, பஞ்சத்தினாலுண்டாகும் துன்பம் நீங்குமென்றே நினைக்கவேண்டும்.

டி. எஸ். சுப்பிரமணிய அய்யர், எம்.ஏ., எல்.டி.

# இயற்கை அற்புதங்கள்
## WONDERS IN NATURE

### XIII. காற்றுகள்
### WINDS

வாயுவில் அசைவு ஏற்பட்டால் அதற்குக் காற்று என்று பெயர். வாயுவில் அசைவு ஏற்படக் காரணம் என்ன? வாயு ஓரிடம் இருந்து வேறோரிடம் ஓடும் தன்மையுடையது. இது கண்ணுக்குப் புலப்படாததால் இதுபோன்ற ஓடும் தன்மையை உடைய தண்ணீரை எடுத்துக்கொண்டு அதில் சில சோதனைகள் பார்த்து அவைகளின் முடிவை வாயுவின் விஷயத்தில் பொருத்திப் பார்ப்போம். ஒரு பாத்திரத்திலிருக்கும் தண்ணீரைக் கையால் சுற்றிவிட்டால் அதில் அசைவு ஏற்படுகிறது. இதுபோன்றது தான் விசிறி முதலியவைகளால் வாயுவில் சலனம் ஏற்படுவது. இதில் விசிறியால் வாயுவை ஒருபக்கம் தள்ள, தள்ளப்பட்ட இடத்துள் ஓடும் தன்மையை உடைய வாயு வந்து மூடிக்கொள்கிறது. ஆனால் வாயுவில் இடம் ஏற்பட்ட இடங்களில் எல்லாம், வாயு இவ்வாறு ஓடிவந்து நிரப்புகிறது என்று சொல்லமுடியாது. முன் அத்தியாயத்தில் கூறப்பட்டுள்ள பாதரஸ வாயு சக்தி அளவையிலிருந்து 30-அங்குலத்திற்குமேல் ஏற்படும் இடத்துள் வாயு வந்து புகுவதும் இல்லை. பாதரஸத்தை ஏற்றி நிரப்புவதும் இல்லை. ஆதலால் இடம் உண்டாவதால் மாத்திரம்தான் வாயுவில் அசைவு ஏற்படும் என்பதை ஸாதிக்கமுடியாது.

தண்ணீரில் இன்னொருவிதத்திலும் அசைவை உண்டாக்கலாம். ஓர் பீச்சாங்குழலை எடுத்து உபயோகப்படுத்தினால் இவ்விதம் நன்றாகவெளியாகும். தண்ணீர் நிறைந்த பீச்சாங்குழலின் அமுக்கு கோலை அமுக்கினால்தான் அதன் மூக்கின் வழியாகத் தண்ணீர் வெளியில் வருகிறது. பீச்சாங்குழலின் மூக்கைத் தண்ணீருள்விட்டு அமுக்கு கோலை இழுத்தால் தண்ணீர் குழலுள் ஏறுகிறது. இரண்டாவது செய்ததை நோக்கில், இடம் உண்டானதால் தண்ணீர் ஏறிற்று என்று சொல்லும்படி வரலாம். ஆனால் முதல் செய்ததை நோக்கில் அவ்வாறு சொல்லமுடியாது. வெளியில் எப்பொழுதும் தான் இடம் இருக்கிறது. அப்படி இருக்க, கோலை அமுக்குங்கால் மாத்திரம் தண்ணீர் மூக்கின் வழியாக வெளிவருவானேன், அமுக்காதிருக்குங்கால் வெளிவராதிருப்பானேன்? ஆதலால் தண்ணீர் சலனத்திற்கும் அமுக்குவதற்கும் ஏதோ ஸம்பந்தம் இருக்கின்றது. ஒரு பக்கம் நாம் பீச்சாங்குழலுள் உள்ள தண்ணீரைத் கோலால் அமுக்குகிறோம். மூக்கின்பக்கத்தில் வாயு அமுக்கிக்கொண்டிருக்கின்றது. நாம் அமுக்குவது வாயுவின் சக்தியைவிட அதிகரித்தால் மூக்கின் வழியாகத் தண்ணீர் வெளிவருகின்றது. நாம் எவ்வளவு வேகமாக அமுக்குகிறோமோ அதற்கேற்ப தண்ணீரும் மூக்கின்வழியாக வேகமாக வெளியாகும். ஆதலால் தண்ணீரில் எந்தப்பாகத்திலாவது அமுக்கும் சக்தி(யாது காரணத்தினாலாவது) மற்றையவிடங்களிலிருக்கும் சக்தியிலிருந்து மாறுபட்டால் தண்ணீரில் அசைவு உண்டாகிறது என்பது தெரியவருகிறது. மேலும் அதிக சக்தி இருக்குமிடத்திலிருந்து குறைந்த சக்தி இருக்கும் இடத்தை நோக்கி அசைவு உண்டாகின்றது. பீச்சாங்குழலில் தண்ணீர் உறிஞ்சும்பொழுதும் இதே ஒழுங்குப்படிதான் நடக்கின்றது. உறிஞ்சும் முன்னர் அமுக்குகோல் குழலுள்ளே இருக்கின்றது. அதைத் தண்ணீருள் விட்டு அமுக்கு கோலை வெளியிலிழுக்கிறோம். அமுக்குகோல் உள்ளிருக்குங்கால் அதன் அடிப்பாகத்திற்கும் குழலின்மூக்கிற்கும் இடையில் காற்றே அதிகம் இல்லை. கோலை வெளியில் இழுக்கும்பொழுது குழலுள் காற்று ஏற இடம் இல்லை. ஏனெனில் அதைத் தண்ணீருள் முழுகும்படி செய்திருக்கிறோம். குழலுள்ளோ அதிக வாயு இல்லாததாலும், இடம் அதிகம் ஏற்படுவதாலும் வாயுவில் அடர்த்தி குறைந்துபோக அமுக்கும் சக்தி குறைந்துபோகிறது. உடனே வெளியிலிருக்கும் வாயு தனது சக்தியால் தண்ணீரைக் குழலுள் ஏற்றுகிறது. இவ்வாறேதான் வாயுவிலும்.

முன்னர் கூறியவைகளிலிருந்து வாயுவில் யாது காரணத்திலாவது ஒரு பாகத்தில் அமுக்குஞ் சக்தியானது மற்றைய பாகத்து சக்திகளைவிட வேறாகிவிட்டால் வாயுவில் அசைவு உண்டாகின்றது. அமுக்கும் சக்தி அதிகமாக இருக்கும் இடத்திலிருந்து சக்திகுறைந்த இடத்தை நோக்கி இந்த அசைவு ஏற்படுகின்றது என்ற விஷயங்கள் வெளியாகின்றன. இம்மாதிரி சக்தி வித்யாஸம் வாயுவில் ஏற்படக்காரணம் என்ன? முன்னே காட்டியபடி வாயுவானது ஒரு பக்கத்தில்(விசிறி முதலியவைகளால்) ஒதுக்கப்பட்டால் அந்தப்பக்கத்தில் சக்தி அதிகமாகும்.

அல்லது பீச்சாங்குழல் விஷயத்தில் ஏற்படுவது போல கொஞ்ச வாயுவுக்கு அதிக இடம் ஏற்பட்டால் அதன் அடர்த்தி குறைய அமுக்கும் சக்தி குறையலாம். இதுபோலவே அதிக வாயு கொஞ்ச இடத்தில் அடைபட்டால் அடர்த்தி அதிகமாக அமுக்கும் சக்தி அதிகமாகும். ஆனால் இம்மாதிரி அமுக்கும் சக்தி மாறுபடுவதால் உலகில் காற்றுகள் உண்டாகின்றன என்று சொல்லமுடியாது; ஏனெனில் வெளியிலிருக்கும் வாயு ஓர் இடத்திலும் அடைபட்டிருக்கவில்லை. ஆதாலால் வாயுவில் சக்தி மாறுபாடு ஏற்பட வேறு ஒரு காரணம் இருத்தல் வேண்டும். இந்தக் காரணத்தை நன்றாக உணரப் பின்வரும் சோதனையைச் செய்வோம்.



ஸாதாரண விளக்கிற்கு வைக்கும் கண்ணாடிப்புகை அடக்கியை எடுத்து வந்து அதன் மேல்பாகத்தில் போகும்படி ஓர் தகரத்தகடை T மாதிரியாக வெட்டுவோம். T இன் நடுப்பாகம் புகை அடக்கியில் பாதிதூரம்போகக் கூடியதாக வைப்போம். மேஜை மேல் ஓர் சிறு மெழுக்குவத்தியை ஏற்றிவைப்போம். அதைச்சுற்றிப் புகைஅடக்கியைவைத்து, அதன் மேல் பாகத்தில் தகர T யைப் போடுவோம். இத்தகரம் புகைஅடக்கியை இரண்டு ஸமபாகமாகப்பிரிக்கும். ஓர்பாகத்தின் அடியில் மெழுக்குவத்தி எரியும்படி புகையடக்கியை ஸரிப்படுத்துவோம். வேறோர் மெழுக்குவத்தியை ஏற்றி விளக்கு எரியும் பாகத்திற்கு நேரே மேலே T அருகில் கொண்டுவருவோம். தீபஜ்வாலை மேலே தூக்கப்படும். மேலும் கீழே இருந்து தீபத்தையாரோ ஊதுகிறது போலக்காணப்படும். ஒருவேளை வெளி மெழுகுவத்தி அணைந்தாலும் அணையும். இதனால் அந்தப்பாகத்தில் வாயு வெளியே ஓடி வருகின்றது என்பது தெரியவருகிறது. இந்த மெழுக்குவத்தியைப் புகை அடக்கியின் அடுத்தபாதியின் மேல் கொண்டு போவோம். தீபஜ்வாலை புகை அடக்கியுள் நுழைகின்றது. இதனால் வெளிக்காற்று இந்த வழியாக உள்ளே போகின்றது என்பது வெளியாகும். ஓர் காகிதத்தைக் கொளுத்தி புகையும்படி செய்து அதை விளக்கு எரியாதிருக்கும் பாதிக்கு மேலே கொண்டுவந்தால் இந்தப் புகை புகையடக்கியுள் எரியும் விளக்கு வரையில்போய் அடுத்த பாதி வழியாக வெளி ஏறுவதையும் காணலாம். இதனால் உஷ்ணத்தால் வாயுவில் அசைவு உண்டாகலாம் என்பது தெரியவருகிறது. மேலும் இந்தப் புகை அடக்கியின் இரண்டு பாகங்களிலும் கையை வைத்துப் பார்த்தால் வெளியேவரும் வாயு உஷ்ணமாக இருப்பதை உணரலாம்.

முன்பார்த்த சோதனையில் இருந்து தெரிந்துகொள்ளக் கூடியவைகளை சுருக்கிச்சொல்லுவோம். விளக்கு எரியும்பொழுது விளக்கால் உஷ்ணப்படுத்தப் பட்டவாயு மேலே கிளம்பிவிடுகிறது. அருகாமையில் உள்ள குளிர்ந்தவாயு விளக்கைநோக்கி நான்கு புறத்திலிருந்தும் ஓடிவருகின்றது. வந்து விளக்கால் உஷ்ணப்படுத்தப்பட்டு மேல் கிளம்புகிறது. இம்மாதிரிவிளக்கு அணையும் வரையில் அதிலிருந்து உஷ்ணமான வாயு மேலே கிளம்பிக்கொண்டே இருக்கிறது: சுற்றுமுள்ள குளிர்ந்த வாயு விளக்கை நோக்கிவந்துகொண்டே இருக்கின்றது. இதனால் தான் விளக்கை எப்படித் திருப்பிய போதிலும் தீபஜ்வாலை எல்லாப் புறங்களிலும் அமுக்கப்பட்டு மேல் நோக்கியே கூறாகக் காணப்படுகின்றது. இம்மாதிரி உஷ்ணத்தால் வாயுவில் அசைவு ஏற்படுகின்றது.

இந்தச் சோதனையின்பின் இரண்டு சங்கைகள் உண்டாகலாம். அவையாவன 'உஷ்ணமான வாயு மேலே கிளம்புவதால் நாம் என்ன அறிந்துகொள்ளலாம்? இங்கு எவ்விதமாக அமுக்கும் சக்தி மாறுபாடு வாயுவில் உண்டாகின்றது?' என்பவைகளே. ஒரு சொம்பைத் தண்ணீரால் நிறைத்துத் தண்ணீர் உள்ள பெரிய பாத்திரத்துள் விடுவோம். அது உள்ளே போய்விடும். அதை வெளியில் எடுத்துக் கொஞ்சம் தண்ணீரைக் கொட்டிவிட்டு உள்ளே விடுவோம். இவ்வாறு அடிக்கடி சோதனை செய்து பார்த்தால் சொம்புள் வாயு ஏற ஏற சொம்பு கீழே முழுகும் வேகம் குறைந்துகொண்டே வரும். இப்படிச் செய்துகொண்டுவந்தால் சொம்பைப் பின்னா உள்ளே அமிழ்த்திவிட்டாலும் வெளியே கிளம்பி வந்துவிடும். இங்குச்சொம்பு கிளம்புவதற்குக் காரணம் தண்ணீரைவிட

அடர்த்தி குறைந்த வஸ்துவாகிய வாயு சொம்புள் அதிகமாக ஏறிவிட்டபடியால் பித்தளைத் தண்ணீருள் போட்டால் மூழுகும் தன்மையுடையதாக இருந்தாலும் சொம்பு மேல் கிளப்பப்படுகிறது. இதேமாதிரி தண்ணீரைவிட அடர்த்தி (கனம்) குறைந்த வஸ்துக்களைத் (சடை, மரம் முதலியவைகளை) தண்ணீருள் அமிழ்த்திவிட்டாலும் அவை மேலேயே வந்துவிடும். உஷ்ணமான வாயு மேலே கிளம்புவதால் அது உஷ்ணப்பட்டதும் சுற்றும் உள்ள வாயுவைவிட அடர்த்தியில் குறைந்துவிடுகின்றது என்பது வெளியாகும். இந்த உஷ்ண அடர்த்தி குறைந்து மேலே கிளம்பியதும் விளக்கண்டையில் உள்ள அமுக்கும் சக்தி குறைந்து விடுகின்றது, உடனே சுற்று முள்ள வாயு விளக்கை நோக்கி வருகின்றது.

ஆகவே இதுவரையிலும் செய்த சோதனைகளிலிருந்து நாம் தெரிந்து கொண்டவை பின் வருவன:—(1) வாயுவில் எங்கேயாவது ஓர் இடத்தில் உள்ள அமுக்கும் சக்தி மற்றை இடங்களிலிருக்கும் சக்தியிலிருந்து மாறுபட்டால் வாயுவில் அசைவு உண்டாகின்றது. (2) வாயு அமுக்கும் சக்தி அதிகமாக இருக்கும் இடத்திலிருந்து அமுக்கும் சக்தி குறைந்த இடத்திற்கு ஓடும் தன்மை உடையது. (3) வாயுவில் அமுக்கும் சக்தியின் ஏற்றத்தாழ்வு முறையே அதன் அடர்த்தி அதிகக் குறைவாலும், அது அடங்கியிருக்கும் இடத்தின் குறைவு விரிவாலும் உண்டாகின்றது. (4) இந்த ஏற்றத்தாழ்வு சீத உஷ்ணங்களாலும் உண்டாகும். நெருப்பு எங்கெங்கே எரிகிறதோ அங்கங்கே எல்லாம் வாயு அசைந்து கொண்டேதான் இருக்கிறது. கீழ்பாகத்தில் வாயு அசையாவிட்டாலும் ஆகாயத்தில் மேகங்கள் ஓடுவதால் அங்குள்ள சீதோஷ்ண ஸ்திதியால் வாயுவில் சலனம் உண்டாகின்றது. பிரபஞ்சத்தில் காற்றுகள் உண்டாவதற்கு (4)வது கூறியதே முக்கியக் காரணம்.

ஓரிடத்தில் சீதோஷ்ண ஸ்திதியால் வாயுவில் திடீரென்று அமுக்கும் சக்தி மிகக் குறைந்துவிட்டால் சுற்றிலும் உள்ள காற்றுமிகுந்த வேகமாய் அங்குவந்து பாய்கின்றது. அடியில் துவாரம் உள்ள ஓர் தொட்டியின் தண்ணீர் எவ்வாறு சுழன்றுகொண்டு வெளிப்படுகின்றதோ அவ்வாறே இங்கு வேகமாக வரும் காற்றானது சுழன்று கொண்டே வரும். இதற்கே சூழல் காற்று என்று பெயர். இம்மாதிரி சிறிய காற்று தெருவில் அடித்து தூசி குப்பைகளைச் சுழற்றுவதை நாம் ஸாதாரணமாகக் காற்றுக்காலங்களில் காணலாம். இதுவே பெரும்புயலாக உண்டானல் தான் மரங்களை முறித்து விடும்; கப்பல்களைக் கவிழ்த்து விடும்.

இக்காரணத்தால் பலவிதக் காற்றுகள் இவ்வாறு உண்டாகின்றன என்பதை இனிமேல் விவரிப்போம்.

ஏ. எஸ். கஸ்தூரிரங்கன், பீ.ஏ., எல்.டி.,

## திருமலை சேதுபதி *

### TIRUMALAI SETUPATHI

(ஒரு தமிழ் நாடகம்)

களம்.—நெல்லைக்கோட்டையில் தலைவர் அரண்மனை.

காலம்.—வைகறை.

[திருமலை சேதுபதியும், (அவர் மனைவி) தருமிநாச்சியாரும் பிரவேசித்தல்.]

தருமி.—இப்படித் தூக்கமின்றி விழித்திருந்தால் நம்ம சோழுவுக்கு உடம்புக்காகுமா? வேறு ஆளில்லாவிட்டால்தான் தீராது; தலைவர், தளவீரர், எல்லாரும் இருக்கிறார்களே.

திரு-சே.—இதுவரையும்தான் உன் மனப்படி வளர்த்துவந்தாய்; இனிமேலாகிலும், தன் ஆண்மைக்கும் அந்தஸ்துக்கும் தக்கபடி, அவன் யுத்தமுறைகளிலும், அரசியல் நடவடிக்கைகளிலும் பழகித் தேறவேண்டாமா? பெண்ணானல் உன்னிஷ்டப்படியே இருந்துவிடலாம். ஏன் ஆணைப்பெற்றாய்?

தருமி.—அதற்காக ஒரே தீர்வையாகப் போட்டுக் கொல்லுகிறதா? சிறிது சிறிதாகவாவது பயில வேண்டும்.

திரு-சே.—அவனாக உன்னிடம் ஏதாவது சொன்னானோ?

தருமி.—நான்தான் சொல்லுகிறேன். அவனைத்தான் காண்பதே அரிதாகிவிட்டதே.

திரு-சே.—தருமி! நான் சொல்வதைக் கேள்: இதற்கெல்லாம் நீ கவலைப்படாதே. எனக்கும் மகன் தானே? உனக்குள்ள அருமை எனக்கில்லையா? அல்லது, எனக்கு வேறொரு ஆசை மகன் இருக்கிறானோ? அவன் தேகசௌக்கியத்தை, நான் கவனித்துக்கொள்ளுகிறேன். உடல் உழைப்பு உலகத்தில் ஒருவரையுங் கொன்றதில்லை.

தருமி.—ஆனல் சாவுதான் ஒன்றா? நாட்டுக்கு ஏதாவது வந்துவிட்டால், உங்களுக்குத் தாயும் வேண்டாம், பிள்ளையும் வேண்டாம்; அவர்களிருப்பதையே மறந்து விடுவீர்கள். உங்கள் உடம்பைப் பார்த்துக்கொள்ள நான் வந்திருக்கிறேன். பளா: நீங்கள் அவனைப் பார்த்துக் கொள்கிறது எங்கே?

திரு-சே.—எல்லாம் சௌபாக்கியவதி தருமி நாச்சியார்தானே என்னைக் குழந்தைப் பருவமுதல் இப்

* அச்சுக்குச் சித்தமாயிருக்கும் இப்பெயர்பூண்ட நாடகத்தில் ஒரு காட்சி இங்கெடுத் தெழுதப்பட்டிருக்கிறது.

பொழுது ஐம்பத்தாறு வயசுவரையும் பேணி வளர்த்துக் கண்பார்த்து வந்ததெல்லாம் ; அந்தப் புண்ணியத்துக்காகத்தானே 'தருமி' என்ற பட்டமும் வந்திருக்கிறது.

தருமி.—உங்கள் அரண்மனைக்குள் நான் அடியெடுத்து வைத்தது முதல், என்னாலியன்றமட்டும், எனக்குத் தெரிந்தவரையும், என் கடமையைச் செலுத்த முயன்றுகொண்டுதான் வந்திருக்கிறேன் ; உங்கள் மனதே அறியும்.

திரு-சே.—இத்தனை கோபமும் உரோசமுமா? ஏது, அம்மாளைப் பரிகாசம்கூடச் செய்யப்படாதுபோலிருக்கிறதே. 'என் மனதறியும்' என்று ஒரு வார்த்தை சொன்னையே, அது மெய்தான் : என் தருமி யில்லாவிட்டால், என்பாடு கொஞ்சம் மோசமாய்த்தான் இருந்திருக்கும். இந்தப் பணியாரத்தில் சருக்கரை அதிகம் ; என் தருமி பேச்சைப்போலில்லாமல் திகட்டுகிறது.

தருமி.—இத்தனை வயசாகியும், கேலியும், குறும்பும் போகவில்லையே இன்னும்.

திரு-சே.—என்னைப் பார்த்தால் கிழவனைப்போலா தோன்றுகிறது உன் கண்ணுக்கு? சரி, சரி, இனி விழிப்பா யிருக்கவேண்டும். சோமு எங்கே? இன்னும் வரவில்லையா?

தருமி.—இன்னும் வரவில்லை ; இராத்திரிச் சாப்பாட்டுக்குப் பின் நான் பார்க்கவில்லை. தூதுச்சங்கதி யெல்லாம் மகாலிங்கம் சொன்னான் : பார்த்துப் பார்த்து, உங்களிடம் வந்து சொல்லவந்தார்களே இப்படிப்பட்ட பேச்சை!

திரு-சே.—தன் மனங்கொண்டு பிறர்மனம் அளப்பதே மனித சுபாவம். சேர்ந்திருக்கும் இருவருமே மகா துரோகிகள் ; பழிபாவத்துக்கு அஞ்சாதவர்கள் ; அவர்கள் சூழ்ச்சி இப்படித்தானே இருக்கும்.

[பணியாள் ஒருத்தி பிரவேசித்தல்.]

பணியாள்.—கோட்டைத் தலைவர் வந்திருக்கிறார் ; ஏதோ தூது வந்திருக்கிறதாம்.

திரு-சே.—இதோ வந்துவிட்டேன் சொல். [பணியாள் போதல்.] தருமி! நான் போய்வருகிறேன். சோமுவைப்பற்றி நீ கவலைப் படவேண்டாம்.

தருமி.—அவனைக் கண்டால் வரச்சொல்லுங்கள். காலையில் ஒன்றும் சாப்பிடவில்லை இன்னும்.

[போதல்.]

அ. மாதவையர், பீ.ஏ.

# சிறுவர்க்கான பக்கங்கள்

## CHILDREN'S PAGES

---

நல்லோர் இணக்கத்தால் வரும் நன்மை அல்லது காஜியின் தந்திரம்.—துலுக்க தேசத்தில் நியாயாதிபதிக்குக் காஜி என்று பெயர். அரசனுக்குக் காலிப் என்று பெயர். ஒருநாள் ஒரு காலிப் தனக்கு உத்யானவனம் லதாக்ருஹம் முதலிய ஸுக வஸ்துக்களைக் கட்டிக்கொள்ளவேண்டும் என்ற எண்ணத்துடன், ஓர் கைம்பெண்ணினது நிலத்தைத் தனக்கு விற்கும்படி அவளை எவ்வளவோ கேட்டுப்பார்த்தான். அதற்கு அவள் 'எங்கள் மூதாதைகள் முதல் இந்தப்பூமி எங்களைச் சேர்ந்தது. இதில் ஓர்வித பற்றுதல் எனக்கு உண்டாகிவிட்டது. இந்த ஸுகம் எங்கே போனாலும் எனக்கு வாராது. ஆதலால் தயவுசெய்து இந்த நிலத்தை என்னிடம் ஒப்புவித்தீர்களாகில், ஓர் அனாதையைக் காப்பாற்றிய புண்யம் தங்களைத் தலைகாக்கும்' என்று வெவ்வளவோ விநயமாக மன்றாடினாள். எப்படியாவது அந்த நிலத்திலேயே தன் ஸுக மண்டபங்களை ஏற்படுத்தவேண்டும் என்ற துர் எண்ணங்கொண்ட காலிப் தன் நயத்தையே கருதினவனாய் கைம்பெண்ணின் மனோவ்யாகூலத்தைக் கவனியாது அவளிடம் இருந்து பலாத்காரமாக நிலத்தைப் பிடுங்கிக்கொண்டு ஈவு இரக்கம் இன்றி அவளைத் துரத்திவிட்டான். அவளுக்கு அவளது கழுதையும் ஒருவெறும் கோணியும் தான் மிஞ்சியது. வெறுங் கோணியைத் தன் கழுதைமேல் போட்டுக்கொண்டு 'கடவுளே என்கதி இவ்வாறாய் விட்டதா?' என்று மனம்நொந்து தலையின்மேல் கையைவைத்து அழுதுகொண்டு புறப்பட்டாள். இவள் அழுதுகொண்டு வரும்வழியில் நியாயாதிபதியாகிய காஜி இருந்ததைக்கண்டு அவனிடம் தனக்கு வந்த கஷ்டத்தை விடாது சொல்லிவிட்டாள். இதைக் கேட்டதும் மஹா பக்திமானான காஜி 'ஐயோ! அரசர்கள் ஏன் வீணாகக் கெட்டுப் போகிறார்கள்! அவர்களுக்கு இம்மாதிரி ஏழைகளை வருத்தவா இவ்வளவு ஐசுவரியமும் பலமும் கொடுக்கப்பட்டிருக்கிறது? எனக்குச் சிரிப்பு, உனக்கு வயிற்றெரிச்சல் என்ற கதையாய் ஏன் நமது காலிப் இவ்வாறு அநீதியில் பிரவேசிக்கவேண்டும். பணமும் உந்நத பதவியும் மனிதனைக் குருடனாக்கி விடுகின்றனபோலும். அனு

தையாகிய இந்த ஏழைக்கைம்பெண்ணை வருத்திப் பிடுங்கிய நிலத்தில் இவன் எவ்வளவு நாள்தான் ஸுகிக்கப் போகிறான்? இவள் வயிற்றெரிச்சல் வீண்போகுமா? என்றிவ்வாறு எண்ணமிட்டுக் கொண்டு, மனங்கனிந்த பிறகு மிகுந்த பரிவுடன் கைம்பெண்ணை நோக்கி 'அம்மா! என் வார்த்தையைக் காலிப் ஒருவேளை கேட்டாலும் கேட்பார். என்னால் கூடியவரையில் உன் நிலத்தை வாங்கிக்கொடுக்க முயலுகிறேன்' என்று கூறி அவளிடமிருந்த கழுதையையும் சாக்கையும் வாங்கிக்கொண்டு காலிப் இருக்கும் இடம்சென்றான் காஜி. இவனைக்கண்டதும் காலிப் கைம்பெண்ணின் மூடத்தனத்தை எடுத்துக் கூறி அவள் முரட்டுத்தனமாக நிலம்கொடுக்க முடியாது என்று மன்றாடியதால் நிலத்தின் கிரயத்தைக்கூட அவள் அடையவொட்டாது துரத்தப்பட்டாள் என்பதை எடுத்து விஸ்தரித்தான். காஜிக்கு மனது பொங்கியது, ஒருவாறு தன் மனக்கிளர்ச்சியை அடக்கிக் கொண்டான். பின்னர், அரசன் தான் அந்த நிலத்தில் கட்டப்போகும் ஸுகமண்டபங்களின் அமைப்பு முதலியவைகளை எடுத்துப்பேசினான். 'அந்யாயத்தில் ஒரு ஆனந்தமா?' என்றெண்ணிப் பெருமூச்சு விட்டான் காஜி. அரசன் சொல்லவேண்டியவைகளைச்சொல்லி மௌனமானதும், காஜி தனக்கு ஓர் விண்ணப்பம் இருக்கிறது என்று கேட்டுக்கொண்டு காலிப்பை நோக்கி, 'நான் அந்தக் கைம்பெண்ணைக் கண்டேன். ஐயோபாவம்! அவள்மிகவும் நொந்திருக்கிறாள். தன் நிலம்போய் விட்டபோதிலும், அதிலிருந்து ஒருகோணி மண்ணாவது கிடைத்தால் நலமாக இருக்கும் என்று ஆசைப்படுகிறாள். இதோ கோணியையும் கழுதையையும் கொண்டு வந்திருக்கிறேன். மண்ணெடுக்க உத்தரவு அளிக்கவேண்டும்' என்று கேட்டான். காலிப் உத்தரவின்பேரில் காஜி சாக்குநிறைய மண்ணை நிரப்பிவிட்டுக் காலிப்பைநோக்கி 'ஐயா இந்த மண்ணைத் தூக்கிக் கழுதைமேல் வைக்க எனக்கு ஸஹாயம் செய்யும்' என்றான். அதற்குக் காலிப் 'என்ன விளையாடுகிறாயா? என்னால் இந்தப்பாரத்தை எப்படித் தூக்கமுடியும். மாட்டேன் போ' என்றான். மிகுந்த மனஉருக்கத்துடன் கையை உயர்த்திக்கொண்டு 'இந்த ஒரு சாக்குமண்ணைத் தூக்குவது உமக்குக் கஷ்டமாகி விட்டதே! நாளை நீர் கடவுள் முன்னிலையில் உமது பாபங்களை எடுத்துரைக்குங்கால் நிலத்தை முழுவதும் கைம்பெண் கதறகதற பிடுங்கியதால் ஏற்பட்ட பாபத்தை எவ்வாறு தாங்குவீர்? என்ன கோரக் கஷ்டத்திற்கு உள்ளாகி விட்டீரே!' என்று நயந்து கூறினார். காஜி சொல்வதன் உண்மை அரசன் மனதில் பதிந்தது. முன்னர் கைம்பெண்ணைக்கண்டதும் காஜிகொண்ட எண்ணங்களையும் வெளியிட்டான். பார்த்தான் காலிப். அநியாயமாகப் பாபத்திற்குள்ளானோமே என்று பரிதவித்தான். உடனே கைம்பெண்ணை அழைத்து வரச் சொல்லி அவளிடம் அவள் நிலத்தை ஒப்புவித்தான், காஜி தன்னை மஹத்தான பாபத்தில் வீழாதிருக்கும்படி தக்க தருணத்தில் காத்ததை எண்ணி எண்ணி மனமுருகிப் பரவசமானான். 'அரசர்களைச் சேர்ந்தவர்கள் இம்மாதிரி இல்லாவிடில் அரசர்கள் பாபங்களையே அறியாது செய்து மிகுந்த கஷ்டத்திற்கு ஆளாவார்கள்' என்று எண்ணமிட்டுக்கொண்டு காலிப் தனது அரண்மனை புகுந்தான்.

நன்மை விதைத்தால் நன்மை விளையும்—ஒரு குருவும் சிஷ்யனும் ஓர்வழியாகப் போய்க்கொண்டிருந்தனர். அங்கு வயல் வரப்பின் அருகில் இருந்த புதரின் அருகாமையில் வழியில்போகும் ஜனங்கள் கண்ணில் அதிகமாகப் படாதபடி ஓர் சட்டைவைக்கப்பட்டிருந்தது. ஐந்தாறு வயல்கள் தாண்டி அப்பால் ஓர் குடியானவன் வேலை செய்துகொண்டிருந்தான். இவர்கள் அந்தச் சட்டை அம்மனிதனது தான் என்று தீர்மானித்துக்கொண்டு அதை மெதுவாக எடுத்துக் கொண்டு புதரினுள் வந்து பரிசோதித்தனர். அதில் ஒரு பவுன் இருக்கக்கண்டார்கள். அப்பொழுது சிஷ்யன் குருவை நோக்கி, ஸ்வாமீ இந்தப் பவுனை எடுத்துக்கொண்டு இந்தச் சட்டையை முன்னிருந்த இடத்தில் வைப்போம். நாம் இந்தப்புதருள்ளேயே இருந்து வேடிக்கை பார்ப்போம். குடியானவன் வந்து என்ன செய்வானோ அதிலிருந்து அவன் குணத்தை அறிந்துகொண்டு இந்தப் பணத்தைக் கொடுத்துவிடுவோம்' என்றான். அதற்குக் குரு 'அப்பா! நீ சொல்லியபடி செய்தால் 'உனக்குச்சிரிப்பு எனக்கு வயிற்றெரிச்சல் என்ற கதையாக முடியும். மேலும் குடியானவனை அநியாயமாக வருத்துவதில் என்னபயன்? அவனையும் வருத்தாமல் அவன் குணத்தை நன்றாக அறியும் வழி இருக்கிறது, அதாவது சட்டையின் மற்றொரு பையில் நமது கையிலிருக்கும் பவுனையும் கூடவேபோட்டு அந்தச் சட்டை இருந்தவிடத்தில் வைத்துவிடுவோம். அவன் வந்து எவ்வாறு நடந்து கொள்ளுகிறான் பார்ப்போம். 'செல்வம்வந்துற்றகாலை' ஒருவன் மனம் சாந்த

மாக இராது. கஷ்டகாலத்தில் மனிதன் சித்தசத்தியுடன் இருந்தாலும் இருப்பான். ஸுகம் வந்தகாலத்தில் அதைச் சாந்தமனதொடு ஸஹித்து பகவானை ஞாபகம் வைத்திருப்பது கஷ்டம். ஆதலால் இந்த வழியில் அவன் குணம் நன்றாகத்தெரியவரும்' என்றார். இருவரும்அவ்வாறே செய்துவிட்டுப் புதரில் ஒளிந்துகொண்டனர். குடியானவன் வந்து சட்டை எடுத்துப்பார்த்துத் தான்வைத்துப்போன பவுன்இருக்கிறதா என்று பார்த்தான். என்ன ஆச்சரியம்!ஒரு பவுனுக்கு இரண்டு பவுன் இருந்தது! இவ்வாறு தன் சட்டையில் அகஸ்மாத்தாய்வந்த பவுனைக்கூட அதிகமாகக் கவனியாது தனக்கு இம்மாதிரி வரும்படி செய்தது கடவுளே என்று மதித்து பகவானைக் கொஞ்ச நாழிகை வாயாரத் துதித்துவிட்டு, இந்தப் பவுன் இன்னாரது என்று விசாரித்துக் கொடுத்துவிட்டால் நலமாக இருக்கும் என்ற எண்ணத்தையும் தனக்குத் தானே வெளியிட்டான். பின்னர் சட்டையை எடுத்துப்போட்டுக்கொண்டு புறப்படும் ஸமயத்தில் இவன் பக்தி பரவசம் நல்ல எண்ணங்கள் இவைகளைக் கண்டு மகிழ்ந்து மிகுந்த ஆனந்த பரவசராகி ஒளிந்திருந்த குருவும் சிஷ்யனும் வெளிவந்து தாம் செய்த விஷயங்களை ஆதியோடந்தமாகச் சொல்லி அவன் நற்குணத்திற்காக அவனுக்கு அந்தப் பவுனைப் பரிசளித்தனர். குடியானவன் மிகுந்த திருப்தியுடன் தனது வீடுசென்றான். அப்பொழுது குரு சிஷ்யனைப்பார்த்து "அப்பா! நீ கூறியபடி செய்திருந்தால் நமக்கு இவ்வளவு ஆனந்தம் வந்திருக்குமா. மனிதனைக் கஷ்டப்படுத்தித்தான் அவன் குணத்தை உணரவேண்டும் என்பதல்ல. ஸுககாலங்களில் எவன் மனங்கலங்காது பகவத்பக்தி செய்கிறானோ அவனே சிரேஷ்டன். அநேகர் துக்ககாலங்களில் பக்தசிரோமணிகளாக இருந்து ஸுகம் வந்தகாலத்து கழுதைகளாகி விடுகின்றனர். ஆதலால் எங்கும் நாம் நன்மையையே செய்துவரவேண்டியது. பரிசோதனைக்குக்கூடத் தீமை செய்யலாகாது. அதனால் நமக்கு வரக்கூடிய ஆனந்தத்தைப்போல, தீமை செய்வதனால் உண்டாகாது. தீமையாகப் பரிசோதனை செய்து ஒருவன் மனம் நொந்து நற்குணம் உடையவனல்ல என்று காட்டிக்கொண்டால் 'ஐயோ ஏன் நாம் அநியாயமாகப் பரிசோதித்தோம். நாமே அவனைக் கெட்டவனாக்கி விட்டாற்போல இருக்கிறதே' என்ற எண்ணம் பாதிக்கும். அப்படியல்லாமல் அவன் நல்லவன் என்று தெரியவந்தால் 'ஐயோ! இந்த மஹா புருஷனையா நாம் இவ்வாறு கஷ்டப்படுத்தினோம்! என்ன பாபத்திற்கு ஆளாகிவிட்டோம்!' என்ற எண்ணம் பாதிக்கும். ஆனால் நன்மை செய்து பரிசோதனை செய்தால் அவன் கெட்டவனாகப்பட்டாலும் நமது மனது அதிகக் கஷ்டப்படாது; நல்லவனாக இருப்பதாக வெளிவந்தால் நமக்கு வரும் ஆனந்தத்திற்கு அளவே இல்லை. ஆதலால் எப்பொழுதும் நன்மையையே செய்யவேண்டும். பரிசோதனை விஷயம் என்ற சாக்கைப் பின்பற்றிக் கூடத் தீமை செய்யலாகாது. நன்மை செய்தால் நம் மனதிற்கு வரும் ஸமாதானத்திற்கு நிகர் வேறொன்றும் இல்லை. ஆகவே 'நன்மை விதைத்தால் நன்மை விளையும்' என்ற இந்த விஷயங்களைச் சிந்தனை செய்" என்று கட்டளையிட்டார்.

***

பெருந்தன்மை.—ஒரு பணக்காரனுக்கு அதிக வயதாகி விட்டபடியால் தான் ஸம்பாதித்த பணத்தைத் தனது பிள்ளைகள் மூவருக்கும் பிரித்துவைத்தான். அப்பொழுது ஓர் விலையுயர்ந்த ஆபரணம் ஒன்றுமாத்திரம் இப்பாகங்களுள் அகப்படாது நின்றுவிட்டது. அப்பொழுது தனது பிள்ளைகளை நோக்கி 'நீங்கள் செய்த காரியங்களுள் எது சிறந்ததோ அதைக் கூறுங்கள். அவைகளுள் பெருந்தன்மை வாய்ந்ததாக இருக்கும் காரியம் செய்திருப்பவனுக்குத்தான் இந்த ஆபரணத்தைக் கொடுப்பதாக எண்ணி இருக்கிறேன்' என்றான். அப்பொழுது முதல் பிள்ளை தகப்பனைநோக்கி, 'ஒருவன் என்னிடத்தில் வெகுநாளைக்கு முன்பு ஏராளமான பணத்தை ஒப்புவித்துவிட்டுப் போனான். என்னிடமிருந்து ரசீது முதலியவைகளும் அவன் பெற்றுக்கொள்ளவில்லை. வெகுநாள் கழித்து இப்பொழுது வந்து பணத்தைக்கேட்டான். நான் அவனிடம் இருந்து பணத்தைக் காப்பாற்றியதற்காக யாதொரு பரிசும் பெற்றுக்கொள்ளாது தயங்காது பணத்தை அவனிடம் கொடுத்துவிட்டேன். இதுதான் நான் செய்தவைகளுள் மிகச்சிறந்தது' என்றான். அதற்குத் 'தகப்பன், அப்பா! நீ செய்தது நியாயமான காரியமே ஒழிய பெருந்தன்மை வாய்ந்த காரியமல்லவே' என்று மறமொழி கூறினான். உடனே இரண்டாவது பிள்ளை தகப்பனை நோக்கி, 'நான் கொஞ்சநாளைக்குமுன் ஓர் குழந்தை ஓர் ஏரியில் விழுந்ததைக் கண்டேன். உடனே ஓடோடியும் போய் என் உயிரைக்கூடக் கவனியாது அந்தக் குழந்தையைக் கரை ஏற்றினேன். இதுதான் நான் செய்த காரியங்களுள் மிகச் சிறந்தது' என்று

கூற, தகப்பன் ‘அப்பா! இது ஜீவகாருண்யம் நிறைந்த கர்மமே ஒழிய, பெருந்தன்மை வாய்ந்த கர்மம் அல்ல’ என்று மறுத்துவிட்டான். அப்பொழுது மிகுந்த விநயத்துடன் கடைக்குட்டியாகிய மூன்றாவது பிள்ளை தன் தகப்பனை நோக்கி ‘பிதாவே! நான் கொஞ்ச நாளைக்குமுன் நடுராத்திரி இருட்டில் அருகாமையில் உள்ள மலைக்குப் போகவேண்டி வந்தது. அங்கு என்ன ஆச்சரியம்! எனது பிராணசத்ரு ஒருவன், ஓர் செங்குத்தாயும் உயரமாயும் உள்ள பாறையின்மேல் படுத்து உறங்குவதைக் கண்டேன். அவனை நான் கொஞ்சம் அசைத்திருப்பேன் ஆகில் அவன் கீழே இருக்கும் பாதாளத்தில் விழுந்து இறந்திருப்பான். அவனைக் கொல்ல எனக்கு மனம் வராது, நான் அவனை எழுப்பி அபாயம் இல்லாத இடத்தில் கொண்டு சேர்த்தேன். இதுதான் நான் செய்த கார்யங்களுள் மிகச் சிறந்தது என்று எனக்குத் தோற்றுகிறது’ என்றான். உடனே தகப்பன் தனது பிள்ளைகளை நோக்கி ‘பிள்ளைகளே! பிராண விரோதியினிடத்தும் காருண்யம் இருந்தலே பெருந்தன்மையின் முக்கிய அடையாளம். ஆதலால் இந்த ஆபரணம் மூன்றாவது பிள்ளையினுடையது’ என்று தீர்மானம் செய்தான்.

---

## சந்தாதாரர்கள் மாத்திரம் சற்றுக் கவனிக்கவும்

ஸ்ரீமத் பாகவத வினாவிடை.—முதல் பாகம், முதல் ஒன்பது ஸ்கந்தங்கள் கொண்டது. 10 அழகிய படங்களும் சேர்க்கப்பட்டிருக்கிறது. விலை ரூ 1. ஸ்ரீ இராமாயண வினாவிடை, ஸப்தகாண்டங்களும் இனிய செந்தமிழ் நடையில் சிறுவர்களுக்கும் சிறுமிகளுக்கும் உபயோகமாகும்படி எழுதப்பட்டிருக்கிறது. விலை அணா 12. ஸ்ரீ மஹாபாரத வினாவிடை, முதல்பாகம், ஆதி, ஸபா, ஆரண்ய, விராட, உத்தியோக பர்வங்களடங்கியது. விலை அணா 12. ஸ்ரீ மஹாபாரத வினாவிடை, இரண்டாம் பாகம், பீஷ்ம, துரோண, சல்லிய ஸ்திரீ, ஸௌப்திக பர்வங்களடங்கியது. விலை அணா 12. இப்புத்தகங்கள், சந்தாதாரர்க்கு மாத்திரம், ஸ்ரீமத் பாகவத வினாவிடை 12 அணாவுக்கும், மற்றைய ஒவ்வொன்றும் 8 அணா வீதம் கொடுக்கப்படும். பிரபாவதீ, இப்பொழுது தான் தயாரான ஓர் சுவையுள்ள சரிதை, விலை அணா 4. ‘கிரேஸில்டா’ அல்லது ‘பொறுமையுள்ள மனைவி’ விலை அணா 3. ஆயாசத உபாக்கியானம், 50 சிறிய நீதிக் கதைகள் கொண்டது. விலை அணா 2. இப்புத்தகங்கள் நமது சந்தாதாரர்க்கு மாத்திரமே 3 அணா, 2 அணா, 0-1-6 விலைக்குத் தனித் தனியே கிடைக்கும். வேண்டுவோர், தாமதமின்றியில், விவேகபோதினி மானேஜருக்கு உடனே எழுதிக்கொள்ளவும். சந்தாதாரர்க்காகவென்று இன்னும் அநேக புத்தகங்களும் குறைந்த விலைக்குக் கொடுக்கப்படும். தயவுசெய்து விளம்பர பக்கங்களைப் பார்க்கவும்.

# ஸ்திரீகளுக்கான பக்கங்கள்

**LADIE'S PAGES**

---

## கண்ணகி அல்லது பத்தினிக்கடவுள்

### 3. தெய்வந் தொழுத காதை

**ஆ**ய்ச்சியர்குரவை ஆகியது. வையை ஆற்றின் கரையில் சுத்தமாகிய நீரில் ஸ்நாநம்செய்ய மாதரி சென்றாள். இப்பால் வந்தார் யாரோ தம்முள் தாம் கோவலன் கொலையுண்டதைப்பற்றி ஊகையாக ஒருவர்க்கொருவர் பேசிக்கொண்டனர். இதைக் கண்ணகி அறியமுடியவில்லை. ஜனங்களுமவளுக்கிதை எவ்வாறு சொல்லுவதென்று மயங்கினார்கள். இவர்கள் நிற்கும் தன்மையையும், தன்னையே நோக்கிக் கூறும் செயலையும் கண்டு, கண்ணகி பொறுக்க முடியாதவளாய், அவர்களை நோக்கி “எனக்குத் தாய்போலும் நின்றவர்களே! நீங்கள் என்ன கூறுகிறீர்கள்? என் கணவன் போனவனின்னம் வரவில்லை. வாராமையால் உலையையூதும் துருத்தியின் மூக்கைக்காட்டினும் என் நெஞ்சம் புகைகின்றது. அவர்கள் கூறுவது என் மனத்தில் ஸங்கடமுண்டாகச் செய்கிறது. அதுமாத்திரமன்று. இந்நேரத்தில் என்னாற் பொறுக்கமுடியாத ஸங்கடமும் மனோவேதனையும் உண்டாகியது; என்கணவனையுமின்னம் வரக்காண்கிலேன். ஆகையால் இவர்கூறுவதென் மனதில் ஸங்கடமுண்டாகச்செய்கிறது. இவர் கூறுவதைக் கவனித்தால் எனக்கென்னமோ ஸந்தேக மூட்டுகிறது. அவர் சொல்லுவது அற்பமாக எனக்குப்படவில்லை. என் கணவன் வாராமையால் என்னை இவர் வஞ்சிக்கிறார்கள். இவர்கள் என்னையே பார்த்து குறிப்பாக கூறாநிற்கின்றனர். எனக்கு ஸங்கடமுண்டாக்குகிறார்கள். அவ்வாறு இவர் கூறுவதெல்லாம் என் மனத்தில் ஸங்கடம் உண்டாக்கச் செய்கின்றது” என்று தோழிகளாகிய பக்கத்தில் உள்ளவர்களோடு மனவருத்தத்தோடு கண்ணகிக்கூற, மனதிற் பொறுக்கமுடியாது அயலில் நின்றவள் ஒருவள் “மன்னன் அந்தப்புரத்தில் சென்று அரசியின் சிலம்பைக் களவாடியதற்காக அரசனால் கொலையுண்டான்” என்று சொல்லமுடியாது வாயாற் குழறினள்.

என்றது கேட்டனள் கணவன் பாடுபட பொறுப்பவள் கண்ணகியோ? அயர்ந்து மயங்கிக் கீழ்

வீழ்ந்தாள். அம்ருதகிரணம் வீசும் சந்திரன் மேகங்களிடை மயங்கிட அம்மழைக்கால்கள் பூமியை அடைவதுபோல்,கூந்தற்கூட்டம் முகமறைக்க ஒன்றுந்தோன்றாது பூமிமேல் உணர்வற்று வீழ்ந்தாள். சற்றே அயர்ந்து எழுந்தாள். சற்று அழுதாள். தலைமேல் கைமோதிப் புரண்டனள். தன்னோடு கூடிவாழ்ந்த கணவன் துயருற்றிறக்க, தானும் சஹகமநம் செய்யாது கைம்மை நோன்பு கொள்ளும்படி பாண்டியன் செய்த தவற்றக்கண்டிருப்பவள் நானுமொருத்தியோ! தன் கணவன் தணலுக்கிரையாக தானும் நெருப்பிற் குளிக்காது ஆறுங்குளமும் தேடிக் குளிரக் குளிக்கும் கைம்மைக்கொண்ட பெண்டிரைப் போல ஏக்கங்கொள்வது நான் ஒருத்திதானோ? தரும வழியிற் செல்கிற பாவனைசெய்து அதர்மவழியிற் செல்லும் பாண்டியனை ஒத்த தருமத்திற்குத் தேவதையாய் நின்ற நீ தான் எனக்குப்பதில்கூறு ? உனக்கு அறிவுமுள்ளதோ? ஆ ஆ! இதுவும் என்கதியோ ” என்று அழுதுக் கொண்டிருந்த கண்ணகி அங்கிருந்த ஆயமாதரை நோக்கி “ஆயமகளீர் ! கேண்மின். நீங்கள் எல்லாரும் ஒருமித்துக்கேளும். நான் சொல்வது பொய்யன்று. என் கணவன் கள்வன் அல்ல. இது பொய்யன்று ! ஸத்தியவாக்கிதுவே! ஹே ! ஸுர்யனே! இவ்வுலகில் நீ யறியாத பொருளொன்றுமில்லை. ஆகையால் நீதான் இவர்களறிய உள்ளதை உள்ளவாறு சொல்’’ என்றாள். என்றதும், அங்கோர் பெரும் சப்தம் உண்டாகியது. “உன் கணவன் கள்வனல்ல. அவனைக் கள்வனென்ற இவ்வூர், கூடிய சீக்கிரத்தில்,எரிந்துவிடும். நீயும் அதைக் காண்பாய்”—என்ற சப்தம் பேரிரைச்சலோடு எல்லார் மனதையும் கலக்கியது.

நன்வழியில் நடப்பவர்க்குக் கோபம் வருவதரிது. இது பிறப்பின் இயற்கை. பெண்டிருக்குமப்படியே. தனக்கு எதுவரினும் கவலைகொள்வது கிடையாது. தம்முடைய கணவர்க்கேதேனும் தகாதவை செய்யில், அவர் யாராயினும் ஸரி,—லக்ஷ்யம் செய்யாது அவர்களைத்தடுத்துத் தன் கணவனை அலக்ஷ்யம் செய்ய காரணமென்னவென்று கேட்டு,ஸரியான பதில் கிடைத்தாலன்றி வெறுமை விடமாட்டார். இது ஆத்திரங்கொண்ட மங்கையரின் ஸ்வபாவம். அவர்களுக்குத் தாமெண்ணாது தம் கணவர்க்குக் கேடு வந்திட்டால் ஓர்கோபமும் ஓர் ஆஸ்சரியமுமுண்டாவது மானுஷ இயற்கைதான். அதுபோல் கண்ணகிக்குத் தன் கணவனைப் பாண்டியன் கொன்றான் என்ற கோபம் ஓர்பக்கம் இருக்க“சிலம்பு விற்கச் சென்றவனைக் கள்வன் என்றும் கொன்றார்களே ! இதுவும் ஓர் ஆஸ்சரியமே !” என்று எண்ணிக்கொண்டு கண்ணகி ஆயமாதரை நோக்கி“யான் யாவரும்படாத துயரமெல்லாமடைந்தேன். இனி ஒன்றுதான் உள்ளது. அதற்கு நான் பயப்படேன். கள்வன் என்றென் கணவனைக் கொன்றார்கள். ஈதென்ன ஆஸ்சரியம். இனி என் கணவனை முன்போல் உயிருமுடனுங் கூடிக் காண்பனோ? ஆஹா! அவ்வாறு காணபேனாயில் அவர் கள்வனோ கள்வனில்லையோ அவர் வாயிலிருந்தே அறிவேன். அது மாத்திரமன்று. அவரைக் கண்டு யான் இம்மொழியைக் கேளேனாகில் என்னைப்பழியுடையாள் என்று ஏளனம் செய்யும். உயிரோடவரை கண்டிம்மொழியை அவர் வாயிலிருந்து அடையேன் ஆகில் என்னை நீவிர் எல்லோரும் பழியுடையாய் ! நீ கள்வன் மனைவி என்றழையும் ! இது ஸத்யம். என் கணவனைக் கள்வனென்றேத்தி கொலை செய்ததென்ன வாஸ்சரியம் !’’ என்று கண்ணகி ஆழ்ந்து வாயார வயிறெரியக் கூறியதெல்லாம் மதுரைப் பதியாரின் மனதைக் கலக்கியது.

இவ்வாறு மலர்ந்த உடன் உதிர்ந்த பூவையொத்த மங்கையாகிய கண்ணகி ஸூரியனை ஸாட்சியாகக் காட்டியது முதல் நின்றவிடம் நில்லாது, தன் கணவனைக் காணாத துயரத்தால் படபடத்து நடந்து வரும் வழியில், கண்ட ஜநங்கள் எல்லாம் “இம்மங்கையின்பால் அரசன் அநீதி செய்தான். செங்கோல் சாய்ந்து விட்டது. இவள் தெய்வம்போல் உலாவுகின்றனள். நமக்கு எத்தீங்கை விளைவிக்குமோ ? ஐயோ ! இவள் பால் ஆலோசியாது அரசன் செய்த அநீதிக்கென்ன விளையுமோ. அரசன் பெருமை இழந்தது. செங்கோல் தாழ்ந்தது. அரசனுடைய நிலைமைக்கும் ஏங்குகிறோம். இவளுடைய நிலைமைக்கும் வருத்தமடைகிறோம். இனி என்ன விளையுமோ என்று அஞ்சுகிறோம்’’ என்று தம்முள் தாம் வருந்த, வழியறிந்து தன் கணவனைக் கொலை செய்த இடத்தை அடைந்தனள்.

தன்னைத் தன் கணவன் காண முடியா நிலைமையிலிருப்பது அவளுடைய மனதைப் புண்படுத்தியது. இதைப் பார்க்க ஸகியாதவனாய் ஸூரியனும் மேற்புறம் சென்றான். வ்யஸன மென்னும் உருவே கண்

ணகி எனினும் ஸரியாக விருக்கும். காலையில் கலந்து பேசியக் கணவனைக் கனவிலிழந்தது போ லிழப்பின் அது மனைவியாகிலைய யுயர்த்துவ தாஸ்சரியமா? மாலைப்பருவமும் அரசன் மேற்கொண்ட கோபம் போல் சிவக்தொலித்தது. மதுரைக் கிருள்மூட வருவதுபோல் இருளும் கவிழ்ந்தது. கண்ணகியின் மனதும் படபடத்தது. மனம் புகைந்தது. வயிறெரிந்தது. பொறமையுமொழிந்தது. தன் கணவனைக்கள்வனென்ற சொல்லொன்றே அவள் மனத்தில் நின்றது. இரத்தப்ரவாஹத்தில் மிதந்து கிடக்கும் கோவலனைக் கண்டதும் ஆ ஆ! வென்றலறியதொன்றே ஊரை அடக்கிவிட காரணமாகலாம். இப்ரமையும் தன்னை அடக்கமுடியா மனக்கவலையும் அவளை மயக்கியது. தன்னுணர்ச்சி தனக்கு வந்ததும் அவன் உடல் மேலிருந்த மாலையைத் தன்மேல் அணிந்துக்கொண்டனள். அவன் ரக்தத்தைத் தன்னுடலிற் பூசிக்கொண்டனள். அவள் மனம் கொஞ்சமேனும் ஆறவில்லை. "யான்படுந் துயரம் உமக்குத் தெரியவில்லையோ? யான்படவேண்டுமென்னும் எண்ணம் உமக்கிருக்கிறதா?—அது போகட்டும்—உம்முடைய அழகிய வடிவம் இப்புழுதியுள் பதிந்து கிடப்பது தகுமோ?—அப்படியேயாயிடில், இம்மன்னனால் செய்யப்பட்ட இந்த அநீதியான கொலை,—எவ்விதத்தால் வந்ததென்றறியாத, எனக்கு,—யான்முன் சென்மத்திற் செய்த பாவத்தின் பயன் என்று இவ்வூரார் கூறுர்களோ?—இது நிற்கட்டும், இதுவும் ஒரு நியாயமாகுமோ? இந்நியாமத்தில் நிச்சப்தமாகிய விந்த ஸமயத்தில் துணையொன்றுமில்லாத ஒருத்தியாகிய என்னைக் கவனித்தலாகாதோ? என் கண் முன்னும் என்னோடு கூடிக் குலாவிய இம்மார்பு இந்த மண்ணிற் படுத்திருப்பதையும் பார்க்கவும் யான் செய்த பாவமோ? இது தகுமோ? இது என்னைத் தேற்றுதற்குக் காரணமல்லவோ? இந்நாட்டார் என்னை ஏளனம் செய்யாரோ? கள்வன் மனைவி என்று சொல்லார்களா? யான் எவ்வாறதைப் பொறுப்பது? யான் செய்த வினை என்னால் யான் எவ்வாறதைப் பொறுப்பது? அநீதி அரசனது செய்கையை என்னவென்று சொல்வது? யான் கண்ணும் கண்ணீருமாயிருப்பது உமக்கானதோ? என் முன் நீருபிப்படி இருப்பதாமோ? மண்மேல் மார்பகம்பட புழுதியுள் புரண்டிருப்பது தாமோ? இவ்வனியாய நகரில் சறகுலமாதரும் உளரோ? கற்புடைய மகளிரும் உள்ளாரோ? பெரியோரும் இருப்பாரோ? இவ்வூரில் தெய்வமென்பதும் ஒன்று உண்டோ? உண்டாயின் இது உண்டாமா?" என்று ஏங்கி அழுத கண்ணகி தன் கணவன் பாற்கொண்ட ஆசையால் தூண்டப்பட்டந்த சவமாகிய கோவலனுடலைக் கட்டிக் கொண்டனள். அதை மார்போடு மார்பகம் வைத்துத் தழுவிக் கொண்டனள்.

தழுவியதும் கோவலன் எழுந்து நின்றனன். "அழகிய உன்முகம் ஏன் வாடியதென்"றவள் கண்ணைத் துடைத்தான். துடைத்ததும் அவன் பாதயிரண்டிலும் வீழ்ந்து தொழுதாள். உடனே "நீ இரு" என்று சொல்லி அமரர் போற்ற மேலுலகமடைந்தான். "ஈதோர் மாயமோ? அன்றியில் வேறென்ன இது? ஈதோர் தெய்வமோ? ஒன்றையும் தெரிந்திலேன்? இதை யாரோடு கூடி ஆராய்வேன்? அவ்வாறு செய்வதற்கு எனக்குள்ள கோப மாறவில்லை? இக்கோபம் எவ்வாறழியும்? அப்பாழுமரசனையே எதிர்த்து அறிவேன்? என் கணவனைக் கொன்றவனை ஏன் கொன்றாயென்று நேரில் கேட்பேன்" என்று தனக்குள் தானே பேசிக்கொண்டு அரசன் அரண்மனைவாயில் இடத்தை அடைந்தாள்.

கணவன்மேற்கொண்ட அன்பானது மனமுழுதும் ஊறி, உடல் முழுதும் பரவி, வைராக்யமென்னும் கோபத்தால் செழிப்பிக்கப்பட்டு, நாணமென்னும் தகைமையை ஒழிக்கச் செய்வதிசயமல்ல. தன் கணவனது பெயரைக் கள்வன் அல்லவென்று நிலைநாட்டுவதற்கு ஸாதனமெதுவோ அதுதான் முக்கியம். மற்றதெல்லாம் வீணே. அந்நாயகனது பெயரை நிலை நாட்டவேண்டுமென்ற போராத்திரத்தோடு வந்த கண்ணகி படபடவென்று கடைமணியை, உற்பாத வைபவங்கள் பலவும் செயற்கொள்ள, கோபங்கொண்ட மனதின் வலியோடு ஒலிசசெய்தாள். செய்ததும், வாயிலோன் வரவுகண்டு "வாயிலோய்! நீ சென்று கையில் சிலம்புடையாள் ஒருவள்—கணவனை இழந்தவள்—வந்துள்ளாள் என்று தெரிவிப்பாய" என்றனள். அவனும் சென்று "வாழிய அரச! கடைவாயிலில் ஒருவள் வந்துள்ளாள். அவள் காளியுமல்லள். பிடாரியுமல்லள்! கணவனை யிழந்தவள்! கோபங்கொண்டுள்ளாள்! கையில் சிலம்பொன்றுடையாள்! உன்னைக் காண விரும்புகிறாள்" என்றான். "அவளை வரசசெய்" என்றான் அரசன்.

கண்ணகியும் வந்தனள். "நீ யார்? ஏன் அழுகிறாய்?" என்றனன் அரசன். "தேர ஆலோ

சனை செய்யாத அரசனே! கேளும் யான் சொல்வதை: "ஆடுங் கடைமணி நாவசையாது" செங்கோல் நடத்தும் சோழன்பதியாகிய புகாரே என்னூர். அவ்வூரில் வணிகர் குலத்திலகனாகிய மாசாத்துவான் மகனாகி, வாழ விரும்பி—என் காற்சிலம்பை விலை பகர்தல் பொருட்டு இங்குவந்து, நியாயத்தை அறியாது கள்வனாக்கப்பட்டுக் கொலைசெய்யப்பட்ட அக்கோவலனார்தம் மனைவியே யான். உன் கொடுங்கோன்மைக்கு இரையாகிய கோவலனார் மனைவியே யான். என்பெயர் கண்ணகி" என்றவள் சொல்ல "கள்வனைக் கொல்லுதல் அநீதி எவ்வாறாகும்" என்றான் அரசன். "என் கணவன் கள்வனல்லவே யல்லன். என் காற்சிலம்புள் மாணிக்க பரல்கள் உள்ளன; வேண்டுமாயின் பரீட்சைசெய்து மற்றது பேசும்" என்றனள் கண்ணகி. என்றதும் அரசன் தன்னிடத்திருந்த சிலம்புள் முத்துப் பரல்தான் உள்ளனவெனலும் "உமதைக் கொண்டு வரும்படிச் செய்யும். என் கணவன்பால் கொண்ட சிலம்பையும் கொண்டுவரும்படிச்செய்யும். அதுவும் பார்ப்பேன். மாணிக்கப் பரலுள்ளது எனதென்று காட்டுவேன்" என்று கண்ணகி கூற அரசனும் கொண்டுவரும்படிச் செய்தனன்.

தன் கணவனது பெயரை நிலைநாட்ட வேண்டுமென்ற பேராவலூட்டிய ஆவேசத்தால் தனக்கும் தெரியாது தன்னிருகைக்குள் அச்சிலம்பை வைத்து, என் கணவனும் கள்வனோ!,—, ஹா—ம்!—, என்றோர் இறைச்சல் செய்து தன் கையைப் பிசைந்தனள். எங்கிருந்து தான் வலிவென்பதுண்டாகியதோ தெரியவில்லை. உடனே அச்சிலம்புடைந்து மாணிக்கக் கற்கள் சிதறியதும் "கொடுங்கோன்மைக்காளாகிய யானு மரசனோ?" என்று கூறிக்கொண்டே அரசன் தலைசாய்ந்துயிர் போயதும், காலம் ஒன்று தான் என்பதற்கு ஸந்தேஹம் கிடையாது.

அரசன் இறந்ததறியாத அரசி தன்னைக்காக்க வேண்டுமென்றதும், அவளை லக்ஷியம் செய்யவில்லை. உடனே கண்ணகி "யான் கற்புடையாளாயின், இவ்வூரழியக்கடவது. என் கணவனுக்கிணங்கிய இக்கொங்கைகள் எனக்கேன்" என்று சொல்லிக்கொண்டு மனவுறுதி முழுதுங்கொண்டு இடக்கொங்கையைத் தனது வலக்கையால் பிசைந்து திருகி எடுத்து "உனக்கின்பமூட்டியவனைக்கொன்ற இவ்வூரை எரியுள் புதைப்பாய்" என்று கூவி மதுரையம்பதியின் மேலதை வீசி எறிந்தான்.

உடனே அக்நிபகவான் அவள் முன் வந்து "இவ்வூரை எவ்வாறு அழித்தல் வேண்டுமென்று வினவ" "பிராஹ்மணர், தர்மஞ் செய்வோர் பசுக்கள், கற்புடையோர், பெரியோர், இளங்குழந்தைகள், எளியவர்கள் இவர்களை விட்டுவிட்டுக் கீழ்க்குண மோங்கி வளருமிடத்தை அழிப்பாயாக" என்று சொல்ல, அக்நிபகவான் அவ்வாறே செய்தான். இதைப் பொறுக்கமுடியாத பூமிதேவியானவள் கண்ணகிபால் வந்து அவளது பூர்வ ஜன்ம விருத்தாந்தங்களைக்கூறி, அவளைத் தேற்றி, அவள் கோபத்தீயையாற்றி "இன்றைக்குப் பதினாலாவது நாள் நீ கணவனோடு தேவருலகடைவாய்" என்று சொல்லிப்போந்தனள். கண்ணகியும் வையையாற்றங்கரையோரமே சென்று, மலைநாடடைந்து, அங்குத் திருச்செங்குன்றமென்னு மலைமீதிருந்த வேங்கை மரத்தின்கீழ் இருந்தாள். பதினான்காநாள் இரவு, கோவலன் தெய்வவடிவொடு வந்தவளை விமானத்தின் மேலேற்றிக்கொண்டு தேவருலகு சென்றான்.

கண்ணகிக்காகத் தமிழ்நாடுமுழுதும் குரவைகளாடப்பட்டன. கோயில்கள், சேரன் சோழன்பாண்டியன் முதலிய வரசர்களாலும், இலங்கையிலாண்ட கஜபாஹு என்னு மரசனாலும் கட்டப்பட்டன. கண்ணகியின் கோபத்தைத்தணிக்கவும், கோவலனிறந்தது முதல் மதுரைக்குவந்த கேட்டை ஒழிக்கவும் ஆயிரம் பொற்கொல்லரை(தட்டாரை)பலியிட்டுக் களவேள்வி(யாகம்) ஒன்றியற்றினன் இளஞ்செழியன் என்னும் பாண்டியன்.—என்பது சிலப்பதிகாரக்கதை. *

பா. சேஷகிரி.

---

* கோவலனைக் கொலைசெய்த இடத்திற்கு 'கோவலன் ப[illegible]ல்' என்று இப்பொழுது வழங்குவதாகவும், அதில் பயிர் விளைவதில்லை ஆயினும் இப்பொழுது நாகப்பட்டினம் சுப்பிரமணிய அய்யர் என்பவர் வாங்கி விருத்திசெய்தும் செழிக்கவில்லை என்றும் கேள்விப்படுகிறேன். வா. சே.

# விசேஷ வர்த்தமானங்கள்

## GENERAL NEWS

---

மரங்களை வைத்துண்டாக்குதல்.—ஒவ்வொருவரும் தங்களால் எவ்வளவு மரங்களை வைத்துண்டாக்கக்கூடுமோ அவ்வளவு வைத்துண்டாக்கவேண்டும். முதல் முதல் மரங்கள் எல்லோருக்கும் மனோரம்யம் உண்டாக்கி அவைகளின்மேல் பிரீதி யுண்டாக்குகிறது. அவைகள் வெயில் நேரத்தில் நிழல் கொடுக்கிறது. அவைகள் அடுப்புக்கு விறகு தருகின்றது. அவைகளின் நிழலால் புல் விருத்தியாகிறது. அவைகளின் இலை காய்கள் மாட்டுத் தீனிக்கு உபயோகப்படுகிறது. கடைசியாய் மரங்களிலிருந்து உத்திரங்கள் முதலிய சாமான்களும் கிடைக்கிறது. குடியானவன் தன் நிலத்தின் மத்தியிலிருக்கும் மரங்களை வெட்டி அப்புறப்படுத்தாமல் அதைச்சுற்றிலும் உழுதுகொண்டு வரும் பழக்கம் அனேகமாய்த் தப்பான காரியம். ஆனால் கொல்லைகளின் ஓரங்களிலும், தெருக்கள் பாட்டைகளின் பக்கங்களிலும், வீடுகளைச் சுற்றிலும் மரங்களை வைத்துண்டாக்குவது தப்பிதமல்ல. இத்தேசத்தில் மரங்கள் வைத்துண்டாக்குவதில் கொஞ்சமும் பிரயாசை கிடையாது; ஆரம்பத்தில் கொஞ்சம் கவனம் செலுத்திவிட்டால் அவைகள் சுலபமாய் உண்டாகின்றன. நல்ல விதைகளாய்ச சேகரித்து அவைகளைச் சரியானபடி உரம்போட்டு தயார்செய்த சிறு பாத்திகளில் விதைக்கவேண்டும். செடிகள் கொஞ்சம் வளர்ந்து சுமார் ஒரு அடி உயரமாகி நட லாயக்காயிருக்கும்போது, 3 அடி ஆழமுள்ளவும், 3 அடி சச்சவுக்கமுள்ள குழிகள் தோண்டி அக்குழிகளிலிருந்து எடுத்த மேல் மண்ணையும், கெட்டியாயிருக்கும் கீழ்மண்ணையும், வெவ்வேறு குவியல்களாய்ப் போட்டு வைக்கவேண்டும். இக்குழி தோண்டப்பட்ட இடம் கல்காடாயிருந்தால் அக்குழிகளுக்குள் கொஞ்சம் நல்ல களிமண்ணையும், களி நிலமாயிருந்தால் அவைகளில் கொஞ்சம் கல்சரளையையும் போடவேண்டும். அப்பால் குழி தோண்டும்போது வைத்திருக்கப்பட்ட மேல் மண்ணையும், கொஞ்சம் கலப்பு பசளை எரு மண்ணையும் (Vegetable mould) சமபாகம் சேர்த்து நன்றாய்க் கலக்கி அக்குழியில் போட்டு நன்றாய் மிதித்து அதில் செடி நடவேண்டும். செடியை நட பாத்திகளிலிருந்து அப்புறப்படுத்தும்போது அதன் வேர்களைச்சுற்றிக் கொஞ்சம் மண்ணிருக்கும்படி கட்டியுடன் பெயர்த்து, அந்த மண்ணை உடையாமல் நன்றாய் உருண்டைசெய்து அதை நடவேண்டும். நட்டவுடன் செடிக்கு நன்றாய்த் தண்ணீர் வார்த்து அப்பால் வாரத்துக்கு ஒருதரம் ஒரு சட்டி தண்ணீர் வார்க்கவேண்டும்.

***

இந்தியாவிலிருந்து எருவகைகளின் ஏற்றுமதி.—1907-08-ம் வருஷத்தில் 4,30,000 ரூபாய் பெறுமான எலும்புகளும், $7\frac{1}{2}$ லக்ஷம் ரூபாய் பெறுமான மீன் எருவும், 15 லக்ஷம் ரூபா பெறுமான பிண்ணாக்கு எருவும், 28 லக்ஷம் ரூபா பெறுமான கால்நடைகளுக்கு உணவாக உபயோகப்படும் பிண்ணாக்கு வகைகளும் ஆக 54,80,000 ரூபாய் பெறுமான வஸ்துக்கள் ஏற்றுமதியாயின. இப்படியிருக்க, கால் லக்ஷம் ரூபாய் பெறுமான எருவகைகள் தான் மற்ற தேசங்களிலிருந்து இந்தியாவுக்கு இறக்குமதியாயின. இப்படியுண்டான ஏற்றுமதி இறக்குமதிகளுக்குள்ள பேதம் பெரிதாயிருக்கிறது. இதைத்தவிர அயல் தேசங்களுக்கு ஏற்றுமதியாகும் தைலவித்துக்களையும் சேர்த்துக் கணக்கிட்டால் ஏற்றுமதிக்கும் இறக்குமதிக்குமுள்ள வித்தியாசம் மிக்கப்பெரிதாகும். ஏனென்றால் அவைகளிலிருந்து அதிக உபயோகமுள்ள பிண்ணாக்கு செய்யப்படுகிறது. அவ்வருஷத்தில் ஏற்றுமதி செய்யப்பட்ட தைல வித்துக்களின் மொத்த விலை மதிப்பு 169-லக்ஷ ரூபாயாகிறது. இவ்விதமாக இவ்விராஜதானியிலிருக்கும் நிலங்கள் ஒவ்வொரு வருஷமும் அடையும் நஷ்டம் சுமார் இரண்டு கோடி ரூபாய் விலைமதிப்புள்ளதாயிருக்கிறது. எலும்புத்தூள், எலும்பு எருவகைகள், பிண்ணாக்கு எருவகைகள், மீன் எரு முதலாகிய இந்நாட்டு எருப்பொருட்களை இங்கேயே முன்னிலும் அதிகமான அளவுக்கு உபயோகப்படுத்துவதால் மேற்சொன்னபடி யுண்டாகும் அதிகமான கெடுதியை நிவர்த்திக்கக்கூடும். எலும்புத்தூளைப் புன்செய்சாகுபடியில் உபயோகித்தால் அது பக்குவமடைந்து பயிர்களுக்கு உணவாவதற்குக் காலதாமதப் படுவதாயிருந்தாலும், நன்செயசாகுபடியில் உபயோகித்தால் அதைவிட சீக்கிரத்தில் பயிருணவாகிறது. மேலும் "போட்டாஸ் எரு" வென்று சொல்லும் சாம்பல் காரத்துடன் கலந்தால் அந்தக் கலப்புப் பொருள் பயிர்களுக்கு அவசியமான எல்லா உண

வுப்பொருள்களையும் கொடுக்கக்கூடிய "சம்பூர்ண எரு" வாகிறது. இந்தக் கலப்பெருவானது நெற்பயிருக்கு அதிகப்பயன் தருவதை நிரூபிப்பதற்குப் போதுமானமட்டிலும் வேண்டிய ஆதாரம்.சென்னை விவசாய டிபார்ட்டுமெண்டாரால் சேகரிக்கப்பட்டிருக்கிறது.இவ்விராஜதானியில் எலும்புத்தூள் அநேக தரங்களாகச் செய்யப்படுகின்றது. மேலும் "எலும்பு சூபர்பாஸ்பேட்" என்னும் எருவும் இப்போது செய்யப்படுகின்றது. இவ்வெருவகைகள் கிருஷிகருக்கு அதிகமாய்த் தேவையாகும்போது எலும்புத்தூள் செய்யும் வியாபாரம் அதிகமாக விர்த்தியடையக்கூடும். "எலும்பு சூபர்பாஸ்பேட்" அநேக பயிர்களைச் சீக்கிரத்தில் வளரச்செய்து பலன் கொடுக்கச் செய்யும் எருவாகும்; மேலும் அதைப் புன்செய் சாகுபடியிலும் உபயோகிக்கலாம்.

***

அவுரி.—இது பசுந்தாளுக்காகப் பயிரிடுவதற்கு வெகு உபயோகமுள்ள பயிர். இது நீடித்த கோடையிலு முண்டாகும். களிமண் நிலங்களில் ஈரந் தங்கியிருக்கும்போது உண்டாகும். ஆனால் கொஞ்சமாவது களருள்ள நிலங்களில் உண்டாகாது. காவேரி நதி தீரத்தில் இது இப்போது அதிகமாய்ப் பயிராகிறது. சம்பாப்பயிர் அறுவடையாகுங் காலத்தில் இந்தப் பயிர் விதைக்கக்கூடும். விதை முளைப்பதற்குப் போதுமான ஈரமிருக்குமானால் அறுவடையானவுடனே கூடிய சீக்கிரத்தில் நிலத்தை உழுது விதைத்துவிடலாம். நிலம் அதிகமாய்க் காய்ந்து போனாலும், அல்லது கலப்பையில் மண் ஒட்டும்படி அவ்வளவு அதிக ஈரமாயிருந்தாலும், நெற்பயிர் அறுவடையாவதற்கு ஒன்று அல்லது இரண்டு வாரங்களுக்கு முன் வயலில் தண்ணீரிருந்தால் அதை வடித்துவிட்டு அவுரி விதைகளை விதைத்துவிடவேண்டும். பெரம்பலூர் தாலூகாவில் குளத்துப்பாசன நிலங்களில் அவுரியைக் கம்புப்பயிருடன் கலந்து விதைத்துக் கிணற்றுத்தண்ணீர் பாய்ச்சும் மேன்மையான பழக்கம் இருந்து வருகிறது. கம்புப்பயிர் விளைவான வுடனே அதை வெட்டிக்கொண்டு அவுரியை நிலத்தில் விட்டுவைக்கிறார்கள். இதில் அதிகமான தழைப்பயிர் உண்டாகிறது. சம்பாப்பயிர் நடுகைசெய்யுங் காலத்தில் இதை நிலத்தில் மடித்து உழுதுவிடுகிறார்கள்.

மஹாபாரதம்.—தற்காலத்திலிருக்கும் மஹாபாரதப் பதிப்பானது மெத்தப் பிழையுள்ளவைகளாய் இருக்கிறபடியால், அவற்றைப் பரிசீலனஞ் செய்து சுத்தப் பிரதியாய் ஒன்று பதிப்பிக்க 1904 வருஷத்தில் ஐரோப்பாவிலுள்ள வித்வத்ஸபைகள் எல்லாம் ஒன்று சேர்ந்து தீர்மானித்தன. அதற்கு இப்போது 2500 (பவுன்) சேர்ந்திருக்கிறதாம். ஆனால் இதற்கு இன்னும் ஒரு லக்ஷம் ரூபாய் தேவையாம். இதை இந்தியாவின் சிற்றரசர்களே கொடுத்துவிடுவார்கள் என்று எதிர்பார்க்கப்படுகின்றது.

***

பால் பொடி.—ஜெர்மெனியில் கோதன்பர்க்கிலிருக்கும் டாக்டர் எம். எகன்பர்க் என்பவர் பாலை மாவு போன்ற ஒருவிதப் பொடியாகச் செய்ய ஒரு யந்திரம் கண்டுபிடித்திருக்கிறார். இந்தப் பொடியில் ஜலம் தவிர பாலிற்கு இருக்கவேண்டிய குணங்களெல்லாம் இருக்கிறதாம். பாலை நாம் எந்தெந்த விதத்தில் உபயோகப்படுத்திக் கொள்ளுகிறோமோ, அந்தக் காரியங்களுக்கெல்லாம் இந்தப் பொடியை ஜலத்தில் கரைத்து உபயோகப் படுத்திக்கொள்ளலாம். அநேக நாட்களுக்கு தகரப் பெட்டியில் போட்டு வைத்துக்கொண்டு எங்கே வேண்டுமானாலும் கொண்டுபோகலாம். எடுத்த பாலை இதுவரையில் வீணாகி வந்ததைத் தவிர்த்து இந்தப்பொடி செய்ய உபயோகித்து வருகிறார்களாம்.

***

எலித்தோல் கைத்தொழில்.—எலித் தோலைக் கொண்டு சீமையில் படங்களுக்குச் சட்டங்கள் செய்கிறார்கள். புஸ்தகங்கள் பைண்டு செய்கிறார்கள். தவிர பை முதலியவைகளும் செய்கிறார்கள். இந்த மாதிரி போன வருஷத்தில் செய்யப்பட்ட சாமான்கள் $7\frac{1}{2}$-லக்ஷத்துக்கு விற்கப்பட்டனவாம். கல்கத்தாவில் எலி அதிகமாக அகப்படுகிறதென்று எண்ணிச்சில ஐரோப்பியர்கள் சீமையிலிருந்து வந்து இந்தச்சாமான்களைக் கல்கத்தாவில் செய்யப் போகிறதாகத் தெரிய வருகிறது.

# விவேக போதினி

“ எப்பொருள் எத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு ”——திருவள்ளுவர்

தொகுதி 11 } ஸௌம்ய௵ மாசி௴ 1910–௵ பிப்ரவரி௴ { பகுதி 8


## ஆராதனை :
## பொதுக் குறிப்புகள்
### WORSHIP. GENERAL REMARKS

ஆராதனைகள் பொதுவாக வெளிப்படை, அந்தரங்கம், காம்யம், நிஷ்காம்யம், என்ற நான்கு வகை என்றும், சிறப்பாக நோக்கின் பிதிர்க்கள், ஆசாரியன், இஷ்டதேவதை, பரம்பொருள் ஆகிய இவர்களை ஆராதிப்பது என்று நான்குவிதம் என்றும், தெரியவருகிறது.

வெளிப்படை அந்தரங்கம் இவ்வித ஆராதனைகளின் முக்கிய நோக்கம் யாதெனில், நமது உலகத் தொழில்களிலிருந்து நம்மைப் பிரித்து உலகவிஷய லாபம் ஒன்றும் இல்லாத செயல்களில் கொஞ்சமாகிலும் பிரவர்த்திக்கும்படி செய்து, நமது மனதைத் தகுந்தபடி விசாலப்படுத்தி ஏகாக்ரப்படுத்த வேண்டும் என்பதே. இவ்விதமாகச் சுத்தப்பட்ட மனதில் ஆத்மாவின் நிஜரூபம், அசைவற்ற தண்ணீரில் ஆகாயம் பிரதிபலிப்பதுபோல், நன்றாக வெளியாகும். இவ்வாறு வெளியாவதனால் உண்டாகும் ஆனந்தமே எந்நாளும் அழியாது நிலைத்திருப்பது. இந்த ஆனந்தமாகிய ஆத்மானந்தம் மனிதனிடம் இருக்கிறது. இதை அடையும் சக்தியும் இவனிடம் உண்டு. ஆனால் இக்காலத்திய நாகரீகத்தால் மனிதனுக்கு ஏற்படும் தொழில்களில் அவன் மனம் அழுந்தி அசுத்தப்பட, அவன் காலத்தைப் பெரும்பாலும் அவைகளிலேயே ஓயாது கழிப்பதால், இவ்வித ஆராதனைகளுள் ஒன்றையும் செய்யக் காலமில்லாமற்போக, வரவர உலக விஷயங்களில் அவன் பற்றுடையவனாகி அசுத்தனாகிறான். இதிலிருந்து மனிதர்களைக் காக்கவே இவ்விருவித ஆராதனைகளும் ஏற்பட்டுள்ளன.

காம்ய நிஷ்காம்ய ஆராதனைகளும் இதையே நோக்கமாக உடையன. மேலும் உலகத்தில் ஸாதாரணமாக ஸுகதுக்கங்கள் மாறிமாறி வரும். இதில் ஸுகத்தைத் தக்கவைக்கவேண்டும், துக்கத்தை நீக்க வேண்டும் என்று மனிதனுக்கு வீண் ஆசை. ஆகவே துக்கக்காலத்தில் அது நிலையற்றது, மிகுந்த வெறுப்பை உண்டாக்குவது என்று உணர ஒருவனுக்குச் சித்தசுத்தி உண்டாகின்றது. ஸுக காலத்திலோ அவ்வாறின்றி மனிதனுக்குப் புத்திமழுங்கிப் போகின்றது. ஸுகத்தின் நிலையாமை அப்பொழுது விளங்காமல் போக அதில் மனம் அழுந்தி மனிதன் மனம் கலங்குகிறது. காம்ய ஆராதனை மூலமாக வேதம் மனிதன் மனதில் ஆராதனத்தைப் புகட்டி விடுகின்றது. வரவர உலக விஷய நிலையாமை விளங்க மனிதனிடம் ஆராதனை மாத்திரம் தங்கிவிடுவதால் அது நிஷ்காம்யமாகிறது. ஆகவே இவ்விருவித ஆராதனைக்கும் பரம்பொருளை உலகப் பற்றின்றி மனிதனை வழிபடச் செய்யவேண்டும் என்பதே நோக்கம். ஆனால் காமிகள் இதை உணரார்கள். அவர்கள் தமது ஆராதனையால் ஸுகம் நிலைத்துவிடும் என்று நிஷ்காமிகளாகும் வரையில் வீணாக எண்ணிக்கொண்டிருப்பார்கள்; பழக்கத்தால் இந்த எண்ணம் மாறும்.

சிறப்பாகக்கூறிய ஆராதனைக் கிரமங்களின் நோக்கம் யாதெனில் நாம் ஆராதிக்கும் வஸ்து, தோற்றங்களுக்கு அப்பாற்பட்டது, நம்மைவிட மேலான நிலையில் இருப்பது என்று காட்டுவதே. இந்த வஸ்து தோற்றங்களைப்போல மாறுதலடைவதன்று, இது நித்யவஸ்து என்று இந்நான்கு சிறப்புவித ஆராதனைகளும் குறிப்பிக்கின்றன. இத்தகைய வஸ்துவின் நிஜரூபம், ஆனந்தம் முதலியன உள்ளபடி பரம்பொருள் ஆராதனத்தில் தான் நன்றாக வெளியாகும்.

ஆதலால் இக்காலத்திய நாகரிக அவஸரத்துள் அகப்பட்டு வீணாகக் கெட்டுப்போகாது, நம்முள் ஒவ்வொருவருக்கும் சிறப்பாக ஏற்பட்டுள்ள ஆராதனைகளை விடாது, அவைகளின் நோக்கத்தை மறவாது, அவைகளில் தகுந்தபடி தினம் கொஞ்சகாலமாகிலும் பழகி, மேலான நமது நித்யானந்த நிலையை நாம் அடைய முயலவேண்டும்.

விவேக போதினி

தொகுதி 2] ஸௌம்ய஁ஸு மாசிமீ [பகுதி 8

## யாகங்கள்-
## பொதுக் குறிப்புகள்
### YAGAS—GENERAL REMARKS

இக்காலத்தில் மாம்ஸ பக்ஷணமே கனவிலும் அறியாத பிராம்மணர் முதலிய சில ஜாதியார்களுக்கு முன்னர் எடுத்துக் காட்டியுள்ள ஸோமயாகம் முதலியவைகளைச் செய்ய மனம் வராது. இவர்கள் ஜீவ ஜந்துக்களைத் தமக்கு ஸ்வர்காதி போகம் வேண்டும் என்றோ அல்லது பகவானை ஆராதிக்கவேண்டும் என்றோ எவ்வாறு கொல்லத் துணிவர்? இது ''அஹிம்ஸாபரமோதர்ம:' என்ற ஜீவகாருண்யக் கோட்பாடுக்கு விரோதம் அல்லவா?' என்று அவர்களுக்கு அடிக்கடித் தோற்றிக்கொண்டிருக்கும் என்பதற்கு என்ன ஸந்தேகம்? ஆதலால் இங்கு முதலில் யாக விஷயமாக ஏற்படும் இந்தச் சங்கைக்கும், இதிலிருந்து மேல் உண்டாகக்கூடிய மற்றைய சங்கைகளுக்கும் தகுந்த ஸமாதானம் கூறப்புகுவோம்.

இந்தச் சங்கையை எடுத்து விஸ்தரிக்கும் முன்னர், நாம் அவசியம் தர்ம விஷயமாக ஒன்றை ஞாபகத்தில் வைக்கவேண்டும். 'எது தர்மம், எது அதர்மம்?' என்ற விஷயத்தைத் தீர்மானிக்க நாம் நமது புத்தியை மாத்திரம் ஆதாரமாகக் கொள்ளக்கூடாது. இந்தப்பொருள் ஔவையார் உலக நீதியில் 'மனம்போன போக்கெல்லாம் போகவேண்டாம்' என்ற வாக்கியத்தில் அமைந்து கிடப்பதையும் காணலாம். பொதுவாக ஜாதியார்கள் செய்யும் தீர்மானத்தால் அறியலாமோ எனின், அதுவும் அவ்வளவு நல்ல வழியல்ல. ஜாதியார்களுக்குப் பொதுவாக வரும் தீர்மானம், அவர்களுள் பெரியவனால் ஏற்படக்கூடியதே ஒழிய வேறல்ல. அவனும் குறைவுகள் நிறைந்த மனிதனாதலின் அவனுடைய மனோபலத்திற்கேற்பவே அவனிடம் இருந்து தீர்மானங்கள் பிறக்கும். இதை இவ்வழிகளில் ஒன்றும் தீர்மானம்செய்ய முடியாதாகையால் இதற்கு ஒரே வழிதான் உண்டு. அதாவது வேதம் முதலியவைகள் உணர்ந்த நமது குருவோ அல்லது மூதாதைகளோ செய்யும் தீர்மானத்தின்படியே நாம் நமது நடவடிக்கைகளைத் திருத்திக்கொள்ளவேண்டும். இதிலும் வேதமே முக்கியமாக நாம் எடுத்துக்கொண்டு யோசிக்க வேண்டிய விஷயம். அதிலுள்ள விஷயங்களைப் பரிசீலனம்செய்து பார்த்துவிட்டுப் பின்பு நமது பெரியோர்கள் நடத்தை (அதாவது சிஷ்டாசாரம்) இவ்வாறிருக்கிறது என்பதை நன்குணர்ந்து அதன்படி ஒழுகவேண்டும். இதையே தருமபுத்திரர் கொக்கு ரூபமான யக்ஷன் கேட்ட கேள்விகளில் ஒன்றிற்குப் பதிலாகக் கூறுகிறார். 'எது மோக்ஷ பந்தா?' என்ற கேள்வி பிறக்க, தருமபுத்திரர், 'வேதங்கள் பலவாறாக இருக்கின்றன. தர்க்கத்தால் பயனில்லை. ரிஷிகளது அபிப்பிராயங்கள் பேதப்பட்டிருக்கின்றன. மத விஷய உண்மைகளோ ரஹஸ்யமாக இருக்கின்றன. ஆகையால் சிஷ்டாசாரமே மோக்ஷ பந்தா.' என்று மறுமொழி கூறினார். ஆதலால் பரமகுருவாகிய ஈசனிடம் இருந்து வந்திருக்கும் வேதங்களை இவ்வாறு சிஷ்டர்கள் அனுஷ்டித்திருக்கிறார்கள் என்பதை உணர்ந்து நாம் இன்னது தர்மம் இன்னது அதர்மம் என்று கண்டு நடத்தல்வேண்டும்.

யாகங்கள் பண்ணுவது நியாயமன்று என்று கூறுவதற்கு முக்கிய காரணம், அவைகளில் பிராணிஹிம்ஸை இருத்தலே. பிராணி ஹிம்ஸையை நோக்கி இவ்வாறு வீரிட்டெழுவது நமக்கு அழகன்று. உலகில் பிராணிஹிம்ஸையே செய்யாமல் ஒருவனால் இருக்கக்கூடுமா?